உ

ஸ்ரீசற்குருவேநம:

# நவநீதசாரம்.

இஃது

வசனரூபமாய்

சகலவேதாந்தசாஸ்திரார்த்தங்களுமடங்கியிருக்கின்

றபடியால் முமுட்சுக்களிற் கற்றவர்களன்றி

மற்றவர்களும் எளிதிலறிந்து

மோட்சானந்தத்தைப்

பெறும்படியானவுபகாரார்த்தத்தைக்

கருதி

சேலஞ்சில்லா சிவில் கோர்ட்டு-வக்கீல்

ம-ா-ா-ஸ்ரீ.

## அப்பாசுவாமிபிள்ளை

## அவர்கள்

வினாவிடைகளாக்கிப் பிழைபறப் பரிசோதித்து,

அச்சிட்டுத்தருகவெனக்கேட்டுக்கொண்டபடி

பாரிப்பாக்கம்.

## முனியப்பமுதலியாரால்

தமது

மெய்ஞ்ஞானவிளக்கவச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

குரோதன (ஙு) - ஆடிமீ".

# பிரகரண அட்டவணை.





பிரகரண அட்டவணை முற்றிற்று.

---

சேலஞ்ஜில்லாசிவில்கோர்ட்டு — வக்கீல்.

ம. ள. ள — அப்பாசாமிபிள்ளையவர்களியற்றிய

கட்டளைக்கலித்துறைகள்.

திருவேதிரைந்துவளர்சென்னைமேவுந்தெருண்மிகுசற் ... *
குருவேமுனியப்பக்கோவே முமூட்சுக்குழாங்கள்பவப் ... *
பெருவேலைநீந்தருந்தாரகத்தைப்பேசமல்கிற் ... *
பரிவோடுமெச்சிற்பதிவுறச்செய்தனன்பாக்கியமே ... *

கற்றவரேயன்றிமற்றெம்மனோருங்கதியடைய ... *
முற்றறிவாளன்முனியப்பன்றனிசன்மொழிகவிருட் ... *
குற்றங்கடியுமவ்வேதாந்தசாரத்தைக்கூறுமதைப் ... *
பெற்றவர்புகழுமெய்ஞ்ஞானவச்சிற்பநிர்த்தனரே ... *

# சிறப்புப்பாயிரம்.

## ஆசிரியப்பா.

மலர்தலையுலகின் மன்னுயிரனைத்தும்
அலர்தருவெம்மலைகப்பட்டுழலும்
கிருமியேபோலக்கிடந்தாணவமுதல்
திருமுதலில்லாத்தீயமும்மலத்தளைப்
பட்டுமூர்ச்சித்தபல்வகைத்துயரம்
விட்டுயவுறுநர்க்குச்சைவமேயென்னச்
சிறந்துளவமலநூற்செப்பிலெண்ணிலதா
நிறைந்தவாரியர்களிகழ்த்தினரவற்றொன்
றாகியஞானவமாம்பொருளமைந்து
போகியும்புகன்றிடப்பொருந்தாச்சிறப்புறு
நவநீதசாரமாநானிலத்ததனை
அவமறவிளங்கவைத்தருளுகவென்னக்
கங்காகுலமாங்கலசவாரிதியில்
மங்காமதியெனவந்தவதரித்தோன்
நலமிகுசுப்பராயநரேந்திரன்
குலவுமாதவத்திற்குமரனென்றுதித்தோன்
பல்லான்றகேள்வியோர்பயிறருசேலஞ்
ஜில்லாசிவில்கோர்ட்டினில்வக்கீலெனும்
அப்பாசுவாமியாமபிதானத்தோன்
செப்பார்நகைத்திருசேர்தடந்தோளினன்
புகன்றனனுகப்புகாறக்கனைத்து
நிகரிலாவவதாரிகைமுதனிறீஇ
எழுதாவெழுத்தினியையவித்தனனெனுளிர்
செழுமாமறையினர்தேடுமோர்பொருளோ
அம்பேயாலியாயமைதரல்போல
இம்பர்நாட்டுள்ளவெம்போலியரும்
எளிதினின்முத்தியெய்தவுருப்புனைஇ
வெளிவந்தாண்டருண்மெய்க்குருமூர்த்தி

உ

ஸ்ரீசற்குருவேநமோநம

# நவநீதசாரம்.

## காப்பு - பாயிரம்.

### விநாயகர் - வணக்கம்.

ஆரணமுதலாச்சொல்லு மாகமமனைத்தும்போற்றும் ...
வாரணமுகவன்றனை வணங்கின்முக்கரணத்தாலும் ...
காரணவறிவின்கண்ணாய்க் கற்பனைக்கடந்தஞான ... ...
பூரணநவநீத போதமங்கருளுந்தானே... .... ... (௧)

### அருளிறை-வணக்கம்.

சொப்பிரகாசவகண்டிதநிசமாஞ்சோதியாய்நிறைந்த மெய்ஞ்ஞானத்
தற்பரமானசிவமெனுமிரதந்தானேயகக்கண்டாய்ச்செனித்தே...
யுற்பவமானசுகதுக்கத்தமிழாதொருப்படுமாறெனக்களித்த ..... ...
சிற்பரயானவரங்கதேசிகன்றன்றிருவடிசென்னியிற்சேர்ப்பாம் ... (௨)

## நூல்வரலாறு.

### வேறு.

கடைந்தவேதாந்தவெண்ணெய்க் கட்டியாய்த்திரட்டிமுன்னோர் ...
திடம்படவைத்தாரத்தைச் சேரவேயுருக்கிநன்றா ... ... ....
யிடம்படநவநீதத்தின் சாரமாய்வகுத்தேனித்தை... ... ... ...
யடைந்தவர்மடமைநீங்கி யல்லலற்றினிதுவாழ்வார்..... ... ... (௩)

# சிறப்புப்பாயிரம்

அருத்தியோடன்பாகமகிழ்ந்திறைஞ்சத்
திருத்தருத்தியெனுந்தெய்வப்பதியுறை
இந்திரபீடத்திறைகரபாத்திர
எந்தைமலர்ப்பதமேத்துமன்பகலாத்
தேசிகன்றத்தாத்திரயயோகீசன்
வாசமார்மலரடிவணங்குசெங்கமல
நாதனடிமுடிநண்ணிடப்பெற்றோன்
கோதமாரரிவரிதுவலியாழ்நாதை
அருணைசலகுமாரியணியிணையடி
பெருவாரமைத்திறம்மிழ்வுறக்கொண்டோன்
கட்செரியலாரிக்கடைவரிக்கைபிசை
பெட்புறவிசைக்கும்பிறைசைசாழுறு
சலகுருசிரோமணிதலைமைசேர்பொற்கழல்
மலமயக்கமகிழ்ந்துளங்கொள்வோன்
உறுபசங்கதிர்வபனுலவிடுமள்ளர்தம்
சிறுமியர்வரிவிழிச்சிறந்ததம்பெடையென
முன்னிவாழ்ளிக்குலமுழக்கிடுகழனியும்
மன்னிபர்வதுவையிற்கடிப்படுமுரசின்
அதிர்குரலொலியுமறத்தவர்தம்மை
எதிர்த்தோரிறைஞ்சிநின்றேத்திடுமோதையும்
அந்தணர்மறைநூலாயுமார்வமும்
செந்தமிழாற்பரன்றிருவடிபழிச்சும்
ஆம்பியுமொன்றியாயிரமம்பலின்
மேம்படுமூர்தியின்மிகுமியமடக்கும்
பாரிப்பாகையான்பல்வேதாந்த
வாரியையுண்டுவளமுறமன்பாரம்
பைங்கூழ்தழைப்பப்பகருமதுபவத்
துங்கமாமழைபொழிதருமுகிலுள்ளம்
கனியப்பரசவோர்க்கருளும்
முனிபுட்பரதமமுத்துதயத்தோனே

இஃது - காஞ்சீபுரம் - இராமசாமி நாயகர் இயற்றியது.



உ

ஸ்ரீ சற்குருவே நம:

# நவநீதசாரம்.

## காப்பு-பாயிரம்.

### விநாயகர் - வணக்கம்.

ஆரணமுதலாச்சொல்லு மாகமமனைத்துப்பொருளும் ...*
வாரணமுகவன்றனை வணங்கின்முக்கரணத்தாலும் ... *
காரணமதியின்கண்ணுறக் கற்பனைக்கடந்தஞான ... ...*
பூரணசுகவதீத போதமங்கருளுந்தானே... .... ...(க)

### அருளிறை-வணக்கம்.

சொப்பிரகாசவகண்டித்திசமாஞ்சோதியாய்நிறைந்த மெய்ஞ்ஞானத்*
தற்பரமானசிவமெனுமிரதந்தானுமேகற்கண்டாய்ச்செனித்தே... *
யுற்பவமானசுகருக்கத்தமிழாலொருப்படுமாறெனக்களித்த ..... ...*
சிற்பரமானவரங்கதேசிகன்றன்றிருவடிசென்னியிற்சேர்ப்பாம் .. (உ)

## நூல்வரலாறு.

### வேறு.

கிடைத்தவேதாந்தவெண்ணெயைக் கட்டியாய்த்திரட்டிமுன்னோர் ...*
திடம்படவைத்தாரதனைச் சேரவேயுருக்கிநன்று ... ... .... *
யிடம்படநவநீதத்தின் சாரமாய்வகுத்தேனித்தை... ... ... ...*
யடைந்தவர்மடமைநீங்கி யல்லலற்றினிதுவாழ்வார்.... ... ... (௩)

அவையடக்கம்.

நானொன்றுந்தானுங்கா நானுவாலவொருபொருளைத் ... ... ...*
தானுமுளக்கண்ணை தனலத் தன்மையுணர்ந்தோர்க்கிடைபுகலல் ... *
மானுகந்தான்மணிப்படத்தால் வையஞ்சமப்பமற்றசன்மூன் .... ...*
பூநாகந்தான்சமப்பவெனும்புன் மையறிவைநிகர்க்குமால்... ... (௮)

பாயிர - முற்றிற்று.





உ

முதலாவது.

# வயிராக்கியப்பிரகரணம்.



## நூல்.

### அவதாரிகை.

இந்நூலாசிரியர் தாமடைந்த நிரதிசயானந்த சாட்சாத்காரசுவானுபூதிப் பிரத்தியட்சத்தை முமூட்சுக்கள் எளிதினுணர்ந்துநித்திய திருப்தியாகும்பொருட்டுக்கிருபைகூர்ந்துவயிராக்கியப்பிரகரணம் - முமூட்சுப்பிரகரணம் - உற்பத்திப்பிரகரணம் - திதிப்பிரகரணம் - உபசாந்திப்பிரகரணம்- நிருவாணப்பிரகரணம்-என்னும், அறுவகைப்பிரகரணங்களால் இந்நூலினிறுமுடிக்கத்தொடங்கி பூர்வஜென்மசமஸ்காரபலத்தினல்கிஞ்சித்துஆவரணவிலட்சணப்பட்டு ஆத்மானுத்மவிவேகம் பண்ணவந்தசீஷனுக்குப்பிரபஞ்சவயிராசமுண்டாகும்படி முந்தி வயிராக்கியப்பிரகரணத்தைக்கூறுகின்றார்.

கலி.

தேகமேயான்மாப்போகஞ்சேர்ந்திடன்முத்தியாமென் .... ...*
றேகமின்மூகராய்நின்றிறந்தவர்பிறவாரென்ற .... ..... ... *
மோகங்களனைத்துநீக்கிமுத்தியையடைவதற்கே .. ... .. *
நாகமாயிருக்குமுத்தர்தாமுமேதேவராவார் ... ..... ... (க)

தேவர்மானிடராளுஞ்செனித்திடல்வளர்தன்மாய்தன் ... ... *
மூவகையிடத்துந்துன்பமாதலான்மோகமென்னுஞ் ... ... *
சீவனுட்பற்றைநீக்கச்சிந்தித்தெத்திறத்தானுந் ... ... ... *
தாவுமால்துடைத்தல்வேண்டுஞ்சற்குருசகாயத்தன்றே... ...(உ)

இதன்பொருள்.

வினா. தேகமேயான்மாவல்லாமல் உள்ளேயாகிலும் வெளியேயாகிலும் ஆன்மாவேறில்லையென்னில்.

விடை. கரணங்களிருக்கிறபடியாலப்படிசொல்லக்கூடாது.

வினா. மனமொன்றேதவிரவேறுகரணங்களுமில்லை - போகங்களில்ஸ்திரீசையோகமேமுத்தி - அவர்களேச்சதாகாலமும் நினைத்திருப்பதே கல்வி - சதாகாலமும் அவர்கள் விசாரத்தினாற்சரீரமிளைப்பதே தவம் - சார்வதாஅவர்களுடன்சரசவுல்லாசமாய் வசனித்திருப்பதேசிவன்முத்தி - எப்போதும்அவர்களது ஸ்தனங்களிற்கூடிச்சையோகவின்பத்திலமிழ்ந்தியிருப்பதே விதேகமுத்தி - அவர்களணிந்துள்ள புஷ்பசந்தனாதிகளின் மணங்களை ஆக்கிராணித்திருப்பதேசுவர்க்கபோகம் - அவர்களதரபானமே தேவாமிர்தம் - இப்படிப்பட்டமதத்தைவிட்டுப் பிரிந்தவனேநரகத்தையடைவன் - இறந்தவர்களொருகாலத்தும் பிறப்பதேயில்லை - அப்படிபிறப்பதுண்டானால் முன்னுள்ளவறிவு இப்போதிருக்கவேண்டும் - அப்படிகாணாமையால்தேகமேயான்மா - போகமேமோக்ஷம் - இறந்தவர்கள்திரும்பவும்பிறவார்களென்பதேநிச்சயமென்னில்.

விடை. இப்படியுளறிக்கொண்டு மிருகபட்சிகளைப்போல வறிவில்லாதவர்களாய் அருந்தல் பொருந்தல்மாத்திரமாய் வீண்காலம்போக்குவார்களாகில் அவர்களுக்குநரகமேயன்றிமோட்சமில்லை - மேலும்நாமிறந்தால் நமக்கிருப்பிடமெங்கே - நாமெங்கேயிருந்துவந்தோம் நமக்குக் கதியேதென்றுவிசாரித்தறியவொட்டாமல் அவர்கள்புத்தியை மறைத்திருப்பது அஞ்ஞான காரியமல்லாமல் வேறல்ல.

வினா. அஃதெப்படியென்னில்.

விடை. தேகமே அறிவுடையவான்மாவென்றால், தேகமிருக்குங்காலமெல்லாம்அறிவிருக்கவேண்டுமேஅப்படிகாணாதபடியினால்தேகமு

வினா. இறந்தவர்கள் மீண்டும்பிறப்பது மெய்யானால்முன்னுள்ளநினைவுகள் தோற்றவேண்டுமே யென்னில்.

விடை- இறந்துபோன புத்திரமித்திராதி தாய்தகப்பனுஞ் சொப்பனாவஸ்தையில் மெய்யாகவந்திருக்கக்கண்டனுபவிக்கும்போது இது பொய்யென்றுஒருவருமே யறியவில்லை முன்னமே இவர்களிறந்துபோனார்களென்று சாக்கிரத்திலறிந்திருந்த சீவன்தானே இப்போதுஞ்சொப்பனங்காணுகிறான் இவனுக்கேன் முன்னுள்ளநினைவுகள்தோற்றவில்லை ஆதலாலிறந்தவர்கள் பிறந்தாலுமுன்னிருந்தநினைவுகள் தோற்றாதென்பதே துணிவு.

வினா. அப்படி தோற்றாமைக்குக்காரணமேதென்னில்.

விடை. இந்தச்சீவன் தூலதேகத்துடன்கூடி இந்திரியவிவகாரமான சாக்கிரத்திருந்து பிறகுஸ்தூலதேகமதைக்கைவிட்டுச் சூட்சுமதேகத்தை யபிமானித்ததினால் முன்னுள்ள நினைகள் தோற்றவில்லை இப்படியே எழுவகைப்பிறப்பிலுமுண்டான நினைவுகளை மறந்து தூலத்தைவிட்டு மெறுபிறப்பாகிய வேறொருதேகத்திற்புகும்போது இந்தச்சீவன் மாறுவன்னைதவிர்த்த பட்டதென்பதினையறியவில்லை ஆதலால் இறந்தவர் பிறவாரென்ற வினா தள்ளப்பட்டு இறந்தவர் பிறப்பாரென்ற சித்தாந்தமே கொள்ளப்பட்டது.

வினா. ஆனால்சிலர்தேவபோகத்தைக்குறித்து யாகாதிகருமங்களைச்செய்கிறார்களே அதனால்பயனில்லையோவெனில்.

விடை. அந்தத்தேவப்பிராப்தியு மிடமில்லை - எப்படியென்றால் தேவயோனிகளிற் பிறக்கிறகாலத்திலுந்துக்கம் நித்தியகாலத்திலும் இந்திராதிதேவர்களாலும் ரிஷீஸ்வரர்களாலும் ஒருவர்க்கொருவரால் நேரிடும் அன்னியோன்னியசாபத்தினாலும் ஒருவர்பெண்சாதி தன்னை யொருவரபகரிப்பதினாலும் ராக்ஷதர்கள்தங்கள் போகபூமியைப்பிடுங்கிக்கொண்டு அடித்துத் துரத்திவிடுவார்களென்கிறபயத்தினாலுந் துன்பமேயல்லாமல் எள்ளளவுமின்பமில்லை - மரணகாலத்திலும் முன்செய்துள்ள யாகாதிகர்மபலத்தினால் ஏழுபத்தொரு சதுர்யுகம் ஆனந்தமயாக

அநுபவித்துத்தீர்ந்தவுடன் அங்குள்ளதேவதைகளால் பிடித்துத்தள்ளப் பட்டுநட்சத்திரங்களாகித்தலைகீழாய்ப் பூமியிலெரிந்துவிழும்போது அவ்வானந்த மறந்தனித்தியமாய்ப் போவதினாலும் மீண்டுநுபவிக்குங்காலத்திலும் முன்பு பசுபந்தனம்பண்ணின பாவகர்மத்தினால்பூமியில் நாக்குப்பூச்சி கிருமிகளாய்ச் செனிப்பதினாலுந் துன்பமென்பதே துணிவு.

வினா. ஆனாலிந்தமானிடப்பிறப்பில்தானின்பமில்லையோவெனில்:

விடை. இந்த மானிடயோனிகளிற்பிறக்கின்றகாலத்திலும் மாதாவின்கருப்பப்பையிற் கட்டுண்டு அவளது மலமூத்திரக்கிருமிகளினாலும் மூலாக்கினியினும்வெதும்பி அவள் அன்னபானாதிகளை நிறையவுண்டபோது உடல் நெருக்கத்தினால் மூச்சுவிடுதற்கிடமின்றிய வருத்தத்தினாலும் அவளுண்ணாதபோது எழுகின்றவுதராக்கினியினால் சுடப்படுகின்றவாயாசையினாலும் பிறவிநோக்குங்கால் பிரசூதவாயுவினால் மொத்துண்டு ஆலையிற்பட்டகரும்புபோலும் செக்கிலிட்ட எள்ளுபோலும் யோனித்துவாரத்தினெருக்குண்டு மலைமேல்நின்றுதலைகீழாய்த் தள்ளுவதுபோல் பூமியிற்பிள்ளையாய் விழுகின்றதினாலுந்துன்பம் - இதிகாலத்திலும் சைசவப்பருவத்தில்கணங்கள் பறவையாதிகளால்வருந்தோஷங்களினாலும், பாலப்பருவத்தில் காதுகுத்தல்சாமுதலிய பலவியாதிகளாற்படும் பிரயாசத்தினாலும், வாசித்தல்முதலியகருமங்களால் உபாத்தியாயர்முதலானவர்களாலுண்டாகும் வருத்தத்தினாலும், குமாரப்பருவத்தில் தனதானியங்களைச் சம்பாதிக்கவேண்டிவருகிறதாக மோகங்களினாலும், அதற்கிடை யூறுவருவதினாலும், விடயபோகவிச்சையினாலும், அகங்காரமிருப்பதினாலும், படியாமற்போனதினாலும், படித்துந் தர்க்கங்கள்பேசவருவதினாலுந் துன்பம் - விருத்தபருவத்திலோவென்றால் ஆசைமிகுவதினாலும், நரைதிரைமூப்புகளினாலும், பலவியாதிகளுண்டாதலினாலும் மனைவிமுதலியோர்களுக்கு வியாதி வருதலினாலுந் துன்பம்ஒருவனுக்குப்பிராணதாரமாயிருந்தபிள்ளைசாகவும், அந்நேரம்வீடிடிந்து விழவும், உழுகிறமாடுசாகவும், கடன்காரர்வந்து மறிக்கவும், அடிமையாள்மறிக்கவும் வாராவிருந்துவரவும் வீட்டில்அரைக்காசளவில்லாமல் அயல்வீட்டில்கடன்கேட்க, அவர்களைக்கொடுக்க வொட்டாமல் முன்கடன்காரர்மறிக்கவும், இப்படிநானாவிததுன்பங்களினால் சாற்றமைவான

சலத்திற் பிரதிபிம்பித்த சந்திரன்போற் கலங்கப்படுகிற வருத்தமுண்டாவதினாலுந் துன்பம் - மரணகாலத்திலும்வாத பித்த சுர க்ஷய குன்ம சூலமுதலான பலரோகங்கள் மேலிட்டுச்சீவத்துவம் பேதித்திருக்கிறபோது நமனைக் கண்டதுபோல் வரும்பயங்களினாலும், நடுக்கங்களினாலும், ஊர்த்துவசுவாசத்தினாலும் வருந்திச் சிலேத்துமத்தில் கட்டுண்டு வேதனையான பிராணப்பிரயாணகாலத்திற் காண்கிற துக்கங்களினாலும், அப்படிப்பிராண னீங்கினபோது நெருப்பாற்றிலுங் கும்பிபாகமான நரகத்திலும் சுடுகிறபாறையிலும் அசிபத்திரவனத்திலும் வீழ்த்தி, யமபடாள் தண்டிக்கப்பட்ட யாதனைகளினாலுந்துன்பம் - இப்படித்தேவர் மானிடரென்னு மிருவகைப் பிறவிகளே துன்பமானால் ஏனைய பிறவிகளாகிய மிருகபட்சி தாபராதிகளெல்லாம் துக்கசமுத்திரத்தழுந்தி பாவமான நரகங்களிற் படும்பாடுகளையெல்லா மிவ்வளவென்றளவிட்டுச்சொல்லமுடியாது ஆகையினா லிந்தப்பிறவிக ணீங்குமார்க்கத்தையே விசாரித்தறியவேண்டும்.

வினா. விசாரித்தறியுமார்க்கமெப்படியென்னில்.

விடை. யானெனதென்னும் பற்றுக்களொழிந்தால் சீவத்துவங்கெடும். இந்த யானெனதென்னும் பற்றுக்களே சீவசொரூபம் இவ்விருவகைப்பற்றுக்களில் முந்தி எனதென்னும்பற்றைவிடவேண்டும்.

வினா. அஃதேதெனெனில்

விடை. பெண்சாதிபிள்ளைகள் கிரகம் பூமி தனதானியாதிகளை யென்னதென்றபிமானிப்பது ஆன்மாவுக்குச்சுபாவமல்ல - அது அறியாமையான மோகாந்தகார மூடபுத்தியினால்வந்தது.

வினா. அதற்குவிவரமெப்படியென்னில்,

விடை. பெண்சாதியானவள் ஒரு தாய்தகப்பனுக்கு மகளாயிருப்பதினாலும் நீ ஒரு தாய்தகப்பனுக்குமகனாயிருப்பதினாலும் அவளொரூர் நீயொரூர் இப்படி புறம்பாயிருக்க அவ ளென்பெண்சாதியென்றனக்குச் சத்தியபுத்தி வரலாகுமா - உன்னைவிட்டு அவள்பிரிந்துபோய் விடுகிறாள் அவளைவிட்டு நீபிரிந்துபோய்விடுகிறாயாகையா லுலகத்தவர்,

சொந்தமல்ல அவனை என்னதென்பதுகூடாது - பின்னும் பிள்ளையை என்னதென்றிருப்பே அந்தப்பிள்ளையை நீயாவுண்டாக்கினையா அல்லதுஉன் பெண்சாதியாலுண்டாக்கப்பட்டதா அல்லது அன்னியர்களாலுண்டான தாயிட்டபடியுங்களொருவராலுமுண்டாக்கப்படாதிருக்க வீணையயங்குவை ஆபிராந்தியேமேலும் சொட்டனத்தில்பலடி பிள்ளைபெற்ற அப்போதும் இந்திராசவித்தையுர வல்லவன் வித்தை காட்டுவதுபோலும் பிரமசிருட்டி யிலுமிருவருக்கு நடுவே ஓர்பிள்ளையெனத்தோற்றியது இதனைப்படிவ ன் பிள்ளையென்று சொல்லுவது தெருவிற்கண்டபிள்ளையை என்பிள்ளை யென்றவன் சொல்லுவான் அதுபோலப்பிரமசிருஷ்டியால் அந்தப்பிள் ளை பிரமன் பிள்ளையல்லாமல் உன்பிள்ளையல்லாதலால்பிள்ளையையென்ன தென்பதுகூடாது - அப்படியே இந்தவீடுவாசல் பூமிதனதானியாதிசம் பத்துகளெல்லாமுன்தகப்பனலார்ச்சிக்கப்பட்டபடியினாலுமவைகளை நோக்கி விசாரிக்குமிடத்து நீயவனுக்குப் பிள்ளையாகையாற் போனபடி யினாலும்நீ இதுகளையும் என்னதென்பதுகூடாது.

வினா. அப்படிக்கல்ல நானே கஷ்டப்பட்டுத்திரவியங்களைச் சம்பாதித்து அதனால் வீடுவாசல் பூமியாதிகளைச் சேகரித்தேனே யெ ன்னில்,

விடை. அப்படியானாலுமந்தத்திரவியங்களுமுன்னதல்ல,

வினா. அதெப்படியென்னில்,

விடை. திரவியங்களெல்லாம் ராஜாக்களுக்குச் சொந்தமானதால் இந்தத் திரவியங்களையுமென்னதென்பதுகூடாது.

வினா. ஆனால் பெண்பிள்ளை திரவியமென்கிற சகிதத்திரயங்களென் னதல்லவென்று போனாலும் இந்தத்தேகமாவது நானிருக்கிற னேயென்னில்,

விடை. தேகமுமுன்னதல்ல நீ ஒருவரிடத்தி லிரவல்வாங்கினது.

வினா. அதெப்படியென்னில்,

விடை. நெடுங்காலமாய்ப் பிறப்பிறப்புகளாகிய துக்கங்களிற்பட்டுதிரி யக்ஸ்தாவரங்களாய்ப்பிறந்துழன்று அந்தப்பிராயாசையெல்லாம்

ஸிருஷ்டித்து விவேகத்திலிருந்து — நீ ஈஸ்வரனை நோக்கி இந்தச்ஜென்மசாபல்லியமாய்க்கரையேறும்படி எனக்கோர்மானிடசரீரங் கொடுத்தருளுமென்றுபிறவிகள்தோறும் வேண்டினபடியால்ஈஸ்வரன்திருவுளமகிழ்ந்து நீ இந்தமானிடசரீரத்தைப்பெற்று நம்மைவேண்டி நிஷ்காமியதவஞ்செய்து நமது திருவடிசுகத்தைப் பெறுவாயென்றிரவலாகக்கொடுத்தருளினார்.

வினா: அப்படியானால் அந்தக்காரணத்தை ஒருவருமே னறியவில்லை யென்னில்.

விடை: கருப்பாசயத்திற் கட்டுண்டிருந்ததினாலும் பிறவிநோக்குங்கால் பிரசூதவாய்வு பூரித்துத்தள்ளுவதினாலும் யோனித்துவாரநெருக்கமுதலிய யாதனைகளாலும் முன்னுள்ள நினைவுகளெல்லாம் இந்தச்சீவன் மறந்து விட்டுப் பஞ்சபூதபௌதிகமாகிய இரவலான இச்சரீரத்தையுந் தானென்றுசத்தியபுத்திபண்ணிக்கொண்டபடியால் ஒருவருக்குங்காரணந்தோற்றவில்லை.

வினா: ஆனாலிரவலென்பதற்குஉவமானமெப்படியென்னில்,

விடை: ஒருபுருஷன் ஒருதொழில்செய்யக்கருதி அடுத்தவீட்டுக்காரனிடத்தில் ஒருகத்தியை யிரவலாகவாங்கிவந்து உடனே அந்தக்கத்தியின்மேல்வைத்த பிரியமோகப்பிரயோகங்களினால் இரவலென்பதைமறந்து சொந்தம்போலவைத்துக்கொண்டு அதனால்தானினைத்தகருமத்தை நிறைவேற்றிக்கொள்ளாம லிருந்துவிட்டான் அப்படியிருக்கச் சில நாளைக்குப்பிறகுகத்திகொடுத்தவன் சடுதியில்வந்துஎன் கத்தியைக்கொடுவென்றுகேட்க இவன்அவனுடையகத்தியென்பதுந் தானிரவல்வாங்கிவந்தது மறந்துவழக்குப்பேசுமளவில் அவன்கோபங்கொண்டு இவனையடித்து வருத்திக்கத்தியைப் பிடுங்கிக்கொண்டு போவானேயல்லாமல்கத்தியைவிட்டுப் போகமாட்டான் — அதுபோல நீயும் ஈஸ்வரனிடத்தில் அநந்தஜென்மங்கடோறும் வருந்திக்கேட்டு இரவலாகவாங்கிவந்த இந்தச்சரீரத்தை இப்போதுபட்ட பிறவிமூர்ச்சை யினால்மறந்துயானெனதென்று சத்தியபுத்திபண்ணிக் கொண்டிருக்கிறாய்இனி நியமப்படி இரவல்கொடுத்தவர்வந்து பறித்துக்கொண்டுபோய்விடு

வார் அப்போதுநான்போலத் திரியக்காதிதாவரங்களாய்ப் பிறந்தலுத்து ழலையோ நாமிச்சரீர மிருக்கும்போதே நல்லதவத்தைப்பண்ணி மோக்ஷமடையாமற் போனோமேயென்று புலம்பிநிற்கவேண்டுமல்லாமல் வேறில்லை.

வினா. ஆனால்நான்போலவே யிரவல்வாங்கிவந்து மறவாமல்தவஞ்செய்து மோக்ஷத்தைப்பெறுவேனென்னில்.

விடை. திரும்பவும் இந்தமானிடசரீரம் பெறுவதரிது.

வினா. அதேதென்னில்,

விடை. நான்கத்தியை யிரவல்வாங்கிவந்துதான் நினைத்தகருமமுடிக்காமல் கத்திகொடுத்தவன்வந்து கேட்டவிடத்தில்தன்சொந்தமென்று வழங்கிட்டதை மறந்துபின்னு மவனிடத்திற்போய் கேட்டால்பரவிக்காரனென்றடித்துத் தள்ளிவிடுவானேயன்றி ஒருபோதுங்கத்தியிரவல்கொடுக்கமாட்டான் அதுபோலவீசுவரன் இரவலாகக்கொடுத்த தேகத்தை நீ யானெனதென்றபிமானித்து அறியாமையினால்பொய்கொலைகளவு கட்காமமாகிய பஞ்சமகாபாதகங்களையே நாயன்று வழக்கிட்டுநின்றதாலினிருக்கினு மிந்தச்சரீரங்கிடைக்கமாட்டாது - ஆதலாலிந்தச்சரீரமும்விவேகமுமிருக்கும்பொழுதே யிரவலுடைமையென்றறிந்து தேகாதிப்பிரபஞ்சங்களிலுள்ள அபிமானமெல்லாம் விட்டு நிஷ்காமியதவம்பண்ணி மோக்ஷத்தைப்பெறவேண்டுமென்றறிவாயாக.

வினா. ஆனால்யானெனதென்னு மபிமானமில்லாவிட்டால் விவகாரங்களெல்லாம் தாங்கினவன்னைப்பொருள் நழுவினாற்போல நழுவி விடுமேயன்றித்திடமாய்நடக்கமாட்டாது - ஆகையாலபிமானமிருக்கட்டுமே அதனாலானதீயதென்னில்.

விடை. ஓர்கிரகஸ்தனான பிராமணன் தன்கிரகிணியோடு கங்காயாத்திரைபோகக்கருதி மறுமனையிற் குடியிருந்த ஒரேழைப்பிராமணனை யழைத்து நாங்கள்காசியாத்திரைபோய் வருமளவும் நீர் குடிக்கூலியின்றிக் குடும்பத்துடன் எங்கள்வீட்டில் குடியிருந்துக்கொண்டு எங்கள்வீடுவாசல்மாடுகளை முதலான சகல பண்டபதார்த்தங்களையும்பதனமாகக் காப்பாற்றி நாங்கள்வந்தவுடன் எங்களிடத்தில் ஒப்புவித்தால்மாதத்திற்கொருவராகன்சம்பளந்தருவேனென்றுசொல்லி அந்தவீட்டைப்

பிராமணனைக் குடிவைத்துவிட்டு யாத்திரைபோய்க்காசிமுதல்கன்னியாகுமரிவரையிலுள்ள மூர்த்திதலம் தீர்த்தங்களைமுறையே தரிசித்துக்கொண்டு சிலநாட்கழித்தபின் தன்வீட்டுக்குத் தன்கிரஹணியோடுவந்துசேர்ந்தான் - அந்தப்பிராமணனைப்பார்த்து குடியிருந்த ஏழைப்பிராமணன் நீங்களாரென்றுகேட்க, நாங்களுன்னை இந்தவீட்டிற்குடிவைத்துவிட்டுக்காசியாத்திரை போனவர்களல்லவா இப்போது நாங்கள் இவந்தராய் வந்துசேர்ந்தோமாதலால்எங்கள்வீடுவாசல் முதலியவெல்லாம் ஒப்பித்துப்போட்டு உன்சம்பளத்தைவாங்கிக்கொண்டுபோவென்றுசொல்லஅந்தவசனத்தைக்கேட்டுகோபங்கொண்டுவீடாவதேது வாசலாவதேது குடிக்கூலிக்கு வைத்துப்போவதாவதேது உனக்கேதாவது பயித்தியம்பிடித்ததோவென்றுகூவி நீ முன்புதானே இந்த வீடுவாசல்களை விற்பனைசெய்துவிட்டுப் போயினையே அதற்குவிக்கிரயசாதன மிருக்கிறதென்று அபிமானித்து வழக்குப்பேச அதுகேட்டகாசிவாசியும் நியாயஸ்தலத்திற்போய் கூகூவென்று முறையிடஅம்முறையிடுதலைக்கேட்ட நியாயாதிபதிகள்வஞ்சகனானஏழைப்பிராமணனைப்பிடித்துவரச்சொல்லி விசாரிக்க அவன் அந்தநியாயாதிபதிகளைப்பார்த்து இவர்கள்யாத்திரைபோகிறபோது விற்றுவிட்டுப்போனார்களன்றிஎன்னைக்குடிவைத்துப் போகவில்லையென்றுபொய்ச்சாதன மொன்றெடுத்துக்காட்ட அதுகண்ட நியாயாதிபதிகள் இதைச்சாட்சிமூலமாயறியவேண்டுமென்று அடுத்தவீட்டிலுள்ளவர்களையழைப்பித்து நீங்களிந்தச்சேதி யறிவீர்களாவென்றுகேட்க அவர்கள்நியாயாதிபதிகளைப்பார்த்துஇவனைக்குடிவைத்துப்போனதேயல்லாமல் வீடுவாசல்களை விற்றுப்போகவில்லையென்று சொன்னார்கள் - அதுகேட்ட நியாயாதிபதிகள் அந்தக்கபடப்பிராமணனைப் பிடித்துக்காவல்பண்ணி நீநிர்தயமாய் ஒருவன்சொத்துகளை யபகரிக்கும்படி பொய்ச்சாதனமேற்படுத்தினபடியால் உனக்குயிந்தஅபராதம் விதிக்கப்பட்டது இந்தஅபராதம்விதித்தமுதற்பொருள்சேருமளவும் நீகாராகிரகமாகியகாவலிலிருந் தழியுஞ் செய்யவேண்டும்நீ அவன் சொத்துகளெல்லாமபகரித்துக் கொண்டபடியால் உன்சொத்துகளெல்லாம் எடுப்போடவிற்று வட்டிக்காகச்சேர்க்கப்படுமென்று நியாயந்தீர்த்தார்கள்அதுபோலத்தோன்றிப்பிரபஞ்ச விவகாரத்தில் ஒருவனுக்கு யாதொன்றே

விடை, பிரத்தியட்சம் அனுமானம் உவமானம் ஆகமம் அருத்தாபத்தி ஐதி
கம் சம்பவம் என்றெட்டுவிதமுண்டு,

வினா, அவற்றுள் பிரத்தியட்சப்பிரமாணமேதென்னில்,
விடை, பிரத்தியட்சத்தில் சந்தேகப்பிரத்தியட்சம் விபரீதப்பிரத்தியட்ச
ம் யதார்த்தப்பிரத்தியட்சமென்று மூன்றுவிதமாயிருக்கும் அவற்
றில் கட்டையைக்கண்டு கட்டையோ கள்ளனோவென்று சங்கற்பித்தது சந்
தேகப்பிரத்தியட்சம் கள்ளனென்றே விகற்பித்தது விபரீதப்பிரத்தியட்ச
ம் கட்டையென்றறிந்தது யதார்த்தப்பிரத்தியட்சமென்று சொல்லப்படும்

வினா, இவற்றிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.
விடை, யதார்த்தப்பிரத்தியட்சத்திற்கொருபிரமாணமும் வேண்டுவதி
ன்று சந்தேகவிபரீதபுத்திநிவிர்த்திக்கே பிரமாணங்கள் வேண்டுவ
தாகையால் ஆசிரியர் பிரஞ்ஞானம்பிரமமென்று இருக்குவேத மகாவாக்
கியத்தையுபதேசிக்கச் சீடனும் அறிவே பிரத்தியட்சத்திற் பிரகாசிக்குமா
றால் தேகாதிசெகத்தெல்லாம் பிரத்தியட்சத்திற் காணப்படுகின்றதாகை
யால் நான்தேகமோ அறிவோ என்றதே சந்தேகப்பிரத்தியட்சம் நான்தே
கமென்றறிந்துகொண்டதே விபரீதப்பிரத்தியட்சம் நான்பிரமமென்று
நிலைத்ததே யதார்த்தப்பிரத்தியட்சம் இவ்யதார்த்தப் பிரத்தியட்சத்திற்கு
வேறுபிரமாணங்கள் வேண்டுவதின்று சந்தேக விபரீதபுத்தி நிவிர்த்திக்
கே அனுமானப்பிரமாணமும் விசாரிக்கவேண்டும்.

வினா, அனுமானப்பிரமாணமாவதேதென்னில்,
விடை, அனுமானத்தில் பிரதிக்கினை ஏது திருஷ்டாந்தமென மூன்றுவித
முண்டு அவற்றில் பர்வதங்களிலக்கினியுண்டென்பதுவே பிரதிக்
கினை, தூமமுள்ளது காரணமென்பதே ஏது, மகானசத்திலக்கினி
யுண்டென்பதுவே திருஷ்டாந்தமாம்,

வினா, இவற்றுள் பிரதிக்கினையிற்சொரூபவபிப்பிராயமேதெனில்,
விடை, பூதங்களான ததழுத்துபவுதிகசராசரமானவோர் தேகத்தைக்கு

மே, லிங்கலேபனமில்லாதவர்களுக்குஞ்சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன்போகிக்கவேண்டுமே அப்படிகாணாமையால்போகிப்பது உபஸ்தேந்திரியமே—பலங்குறைந்து குதஞ்சுருங்கலானவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன்மலவிசர்க்கஞ் செய்யவேண்டும் அப்படிகாணாமையால் மலவிசர்க்கஞ்செய்வதுபாயுரிந்திரியமே—இப்படியிருக்கஇந்தக்கன்மேந்திரியவறிவுகளையெல்லாந்தன்னதாகக்கொண்ட ஆவரணம்விடுபட்டு இவைகளாலார்ச்சிக்கப்பட்டபுண்ணியபாவங்களெல்லாந் தனக்கில்லையென்றுஞானதிருஷ்டியாற்கண்டு அசங்கனாகிய கூடஸ்தசொரூபமே தானென்பது விசாரித்தறியவேண்டும்—இந்தப்படியே பஞ்சகோசங்களையுஞ் சீவன்தானென்று ஆரோபிதமாய்க் கொண்டதல்லாமல் சீவனுக்கில்லை.

வினா. அதெப்படியென்னில்,

விடை. பருத்தேனிளைத்தேனென்பதுஆறுதத்துவமான அன்னமயகோசதாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை-உசுவாசித்தேன் நிசுவாசித்தேனென்பதுபிராணமயகோசதாதாத்மியமன்றிச்சீவனுக்கில்லை - சங்கற்பித்தேன்விகற்பித்தேனென்பதுமனோமயகோச தாதாத்மியமன்றிச்சீவனுக்கில்லை - நான்கர்த்தாபோக்தாவென்பது விஞ்ஞானமயகோசதாதாத்மியமன்றிச்சீவனுக்கில்லை - நான் அஞ்ஞானிமூடனென்பதுஆனந்தமயகோசதாதாத்மியமன்றிச்சீவனுக்கில்லை,

வினா. அதெப்படியென்னில்,

விடை. என்சரீரமென்னும்போது தான்வேறுசரீரம்வேறென்றும் என் இந்திரியமென்னும்போதுதான்வேறு இந்திரியம்வேறென்றும், என்பிராணனென்னும்போது தான்வேறு பிராணன்வேறென்றும் என்மனமென்னும்போது தான்வேறுமனம்வேறென்றும், என்புத்தியென்னும்போது தான்வேறுபுத்திவேறென்றும், என்சித்தமென்னும்போதுதான்வேறு சித்தம்வேறென்றும், என் அகங்காரமென்னும்போது தான்வேறு அகங்காரம்வேறென்றும், என் அஞ்ஞானமென்னும்போதுதான்வே

று அஞ்ஞானம்வேறென்றும், வருகிற அனுபவத்தினால் தனக்கன்னியமாக
க்கண்டுசாட்சியாகியதன்னிடத்தில் ஆரோபிதமாய் விவகாரதசையில்மா
த்திரமிருக்கிறதென்று விசாரித்தறியவேண்டும்.

வினா, இப்படியறிந்தவர்களுக்கு ஆரோபிதமில்லையோவெனில்,

விடை. இப்படிசாட்சிமாத்திரமாயிருப்பவர்களுக்குச்சத்தமறிவதாகிய
சுரோத்திரமும், பரிசமறிவதாகியதொக்கும்ரூபமறிவதாகியசட்
சுவும், ரசமறிவதாகியசிங்குவையும் கந்தமறிவதாகிய கிராணமும், வசனி
ப்பதாகியவாக்கும், ஏற்றவிடுதலாகியபாணியும், கமனம்பண்ணுவதாகிய
பாதமும், ஆனந்திப்பதாகியவுபஸ்தமும், மலவிசர்க்கம் பண்ணுவதாகி
யபாயுரும், உச்வாசநிச்வாசம்பண்ணுவதாகியபிராணாதிவாய்வுகளும், சங்
கல்பவிகல்பஞ்செய்வதாகியமனமும், நிச்சயிப்பதாகியபுத்தியும், அஞ்
ஞானமாகிய அவித்தையும்பின்னமின்றியபின்னமானஅறிவுசொரூபமா
ய்க்கண்டிருப்பதால் விசாரித்தறிந்தவர்களுக்காரோபிதமேயில்லை இப்ப
டிஒருவிகாரமின்றிநிருவிகாரமாயிருக்க அவாந்தரகற்பனையான மனமய
க்கத்தினாற்ஜெனனமரணங்களுமுண்டானதுபோற்றோற்றியது.

வினா, அப்படியானால் ஜெனனமரணநரகசொர்க்கங்களனுபவித்ததா
ரென்னில்,

விடை, கன்மகாண்டத்தில் விதியாகச்சொன்ன புண்ணிய கன்மங்களைத்
தேகேந்திரியங்களாற்செய்து அதற்குத்தக்கதேவபோகங்களையு
ந்தேகேந்திரியங்களேயனுபவித்தது - நிஷேதமாகச்சொன்னபாவகன்
மங்களைத்தேகேந்திரியங்களாற்செய்து அதற்குத் தக்கதிரியக்காதிஸ்தா
வரசரீரங்களெடுத்து துக்கரூபமான நரகங்களையுந் தேகேந்திரியாதிக
ளேயனுபவித்தது - இந்தத்தேகேந்திரியாதிகளேதானென்றும் இதுக
ளாலார்ச்சிக்கப்படும் புண்ணியபாபகன்மங்களைத் தன்னதென்றும் அத்
தியாசமாகக்கொண்டவபிமானதோஷத்தினால் அளவிறந்தஜெனனமரணங்
களுண்டாயிற்று - தீர்க்கமாய்விசாரித்தறியுமிடத்தில் சகலமும் இந்தத்தே
கேந்திரியாதிகளுக்கேயல்லாமல் ஏகமாய்நித்தியமா யிருக்கப்பட்டதானு

கியகூடஸ்தருக்கில்லையென்றறிவதே வேதாந்தசித்தாந்தம், இதற்குதாரணம் வாசிட்டம்.

தெரித்தறியும்பொருளேக்கச்சிவவறிவதுவாகச் செப்பலாகும் விரித்தபுலன்னுபவித்துமனுபவியாமனமதுவாய்விளம்பலாகும் புரித்துவுணர்வொளிநெஞ்சு மூலகிவற்றினறிவது வாய்ப்புகலலாகும் - பரித்ததொழில்செய்யினுங்கற்போலிருக்கு நிலையதுவாய்ப் பகரலாகும்-என்றும் * முடிவுகனவஞ்ஞானமில்லா நீடுயிலதுவாமும்மையாகி - யடர்தருஞாதுருஞானஞேயமெழுந்தொடுங்குமிட மதுவேயாகுந்-திடவிசும்பனையிருந்தும் விசும்பாணிலையதுவாஞ்சித்தம்புந்தி - படர்மனம்போய்த்தாயாவுள்ளறிவு பெறுமெலாப்பாமப்பாமருபம்-என்றும்- உபநிடதம்,

தோற்றுமசத்தறிந்தகலத்தொடர்பகலுமே தெளிவித்தாலதேனமாற்றுதொழுந்தொழிலகளுமிந்திரியச் செயலகன்றால் வையநீங்கு—மேற்றுமனேலபத்திலைறுமவிடய மவித்தையைநீங்கிவிடாவுநீங்கும் - மேயற்றுமிந்தச்சிவவறிவிழந்தவிடம்புகல்பரிபூரணமதாமே * மெய்மொழி * ஓசைகேட்டிடுஞ்செவியறுசுவையு முண்ண நாவுடல மூதறிய—வாசமூக்குயிர்ப்பவுருவுகண்காண மற்றுமெக்கருமமுஞ் செய்க—வாசடைப்புலன்களனுபவித்திடினுமப்பின் மூழ்கிடினுமம்புயத்தின்—பாசடைநீரிற்பற்றிலாததுபோற்பற்றிலார்பரமயோகிகளே * பூரணப்பிரகாசம் * உடம்புடனிருந்தேயுடம்பிலாவுண்மையுணர்ந்தவனுளத்தொருக்காலும்—விடம்படுகாமம்வெகுளிமேவாதுவிளம்பிடும்பொருளெலாம்விளக்குமிடம்படுமிதயாகாசமற்றிதுவே யிறப்பொடுபிறப்பிலாதென்றுந் — இடம்படும்பிரமமாவது யான்யாவாவதுந்தேகிகட்கெல்லாம் * சிவஞானசித்தியார் * சாக்கிரத்திலதீதத்தைப் பொருந்திடின்மற்றவரோ சகல சங்கமுடனிருந்துஞ் சங்கமிலாதவர்தம்—பாக்கியத்தை யின்னதெனப் பகர்வதுவென்னுயிரின் பற்றறுத்திட்டிம்மையிலே பற்றற்றிங்கிருப்பா—ராக்கைமுடிகவித்துக்கொண்டரிவையர்களுடனேயனுபவித்தங்கிருந்திடினுமகப்பற்றற்றிருப்பர், நோக்கியிதுபுரியாதோர் புறப்பற்றுலுண்ணுழைவர்

பிறப்பினில்வினைகளுங்கிடாவே * என்றும்—மன்னவன்றன் மகன்வேட
ரிடத்தே தங்கிவளர்ந்தவனையறியாதுமயங்கிநிற்ப—பின்னவனுமென்மக
னீயென்றவரிற்பிரித்துப்பெருமையொடுதானாக்கிப்பேணுமாபோல—
றுன்னியவைம்புலவேடர்சுழலிற்பட்டுத்துணைவனையுமறியாதுதுயருறுந்
தொல்லுயிரை—மன்னுமருட்குருவாய்வந்தவரினீக்கி மலமகற்றித்தானா
க்கிமலரடிக்கீழ்வைப்பான்-என்றும்—சொரூபசாரம்- நனவிற்றசேந்தி
ரியநாட்டியங்கள்பார்ப்போங்- கனவின்மனக்கூத்தைக்காண்போ நனவி
ற்-சுழுத்தியிலேயில்லாததனியக்கூத்தாடி - விழுப்பொருளாய் நாமிருப்
போமே-என்றும்-தத்துவராயர்-ஞானவினோதன் கலம்பகம்-அலராயின
செய்யுமைம்புலன்காளெம்மறுபகையாங் - கலகாள்பலகுணங்காண்மலங்
காள்கரணங்களென்றும் - பலகாளருட்சொரூபானந்தனார் பவளத்திரு
வாய் - மலராதளவுமன்றேவுங்களோ டெங்கள்வாழ்வுகளே—என்றும்-
போதாத்துசாரம்- கற்பிதப்பொருள்கடம்பைக்கடவுளாய்க்கருதித்தொ
ல்லை - யுற்பவந்தன்னினின்றே யுழைத்தனனெண்ணில்காலந் - தற்பரம்
பொருளாய்வந்தஎம்பிரான்றாடொழாதே - புற்புதக்கனவிற் பொன்றாற்
பூண்செயக்கருதினேனே—என்றும்-அவிரோதவுந்தியார் - அகுணனிக்
கோலொன்றலைம்புலனும்- திசையுமேற்கெடமக்குந்தீபற - வெங்ஙன
மெய்துமென்றுந்தீபற-என்றும், தத்துவராயர்அமிர்தசாரம்-சிந்தாகுல
மனிதர் சீசீசெவிழுதலா - மைந்தானுமீட்டழியவல்லாரோவைந்திலொரு-
வேட்கையசுணமிபம்விட்டில்மீன்வண்டிவைகள்- கேட்கைதூதலொவொ
ன்றின்கேடு—என்றும்-திருவாய்மொழி - ஆவிதிகைக்கவைவர் குமைக்கு
ஞ்சிற்றின்பப்-பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ - தாவியவையங்
கொண்ட தடந்தாமரைகட்கே-கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ-
என்றும்திருவாசகம் * அடற்கரிபோலைம்புலன்களுக்கஞ்சியழிந்த வென்
னை * விடற்கரியாய் விட்டிடுதிகண்டாய் விழுத்தொண்டர்க் கல்லாற் *
றொடற்கரியாய் சுடர்மாமணியேசுடுதீச்சுழலக் * கடற்கரிதாயெழுநஞ்

ஙியகூடஸ்தருக்கில்லையென்றறிவதே வேதாந்தசித்தாந்தம், இதற்குகாரணம் வாசிட்டம்.

தெரித்தறியும்பொருளேக்கச்சீவவறிவதுவாகச் செப்பலாகும் விரித்தபுலனனுபவித்துமனுபவியாமனமதுவாய்விளம்பலாகும் புரித்தவுணர்வொளிநெஞ்ச மூலவிவற்றின்றிவது வாய்ப்புகலலாகும் - பரித்துமதொழில்செப்பினுங்கற்போலிருக்கு நிலையதுவாய்ப் பகரலாகும்-என்றும் * முடிவானவஞ்ஞானமில்லா நீடுயிலதுவாமும்மையாகி - யடர்தருஞாதுருஞானரூபமெழுந்தொடுங்குமிட மதுவேயாகுந்-திடவிசும்பனீராயிருந்தும் விசும்பான்நிலையதுவாஞ்சித்தம்புந்தி - படர்மனம்போய்த் தாபரவுள்ளறிவுபெறுமெலாப்பரமப்பரமரூபம்-என்றும்- உபநிடதம்,

தோற்றுமசத்தறிந்தகலத்தொடர்பகலுமே தெளிவித்தாலதே மாற்றுதொழுந்தொழில்களுமிந்திரியச் செயல்கள்றுல்லையநீங்கு—மேற்றுமனோலயத்திலறுமவிடய மவித்தைதலையநீங்கிவிடாவுநீங்கும் - போற்றுமிந்தச்சீவவறிவிழந்தவிடம்புகல் பரிபூரணமதாமே * மெய்மொழி * ஓசைகேட்டிடுஞ்செவியறுசுவையு முண்ணும் நாவுடல மூறறிக—வாசமூக்குயிர்ப்பவுருவுகண்காண மற்றுமெக்கருமமுஞ் செய்க—வாசடைப்புலன்களனுபவித்திடினுமப்பின் மூழ்கிடினுமம்புயத்தின்—பாசடைநீரிற்பற்றிலாததும்போற்பற்றிலார்பரமயோகிகளே * பூரணப்பிரகாசம் * உடம்புடனிருந்தேயுடம்பிலாவுண்மையுணர்ந்தவனுளத்தொருக்காலும்—விடம்படுகாமம்வெகுளிமேவாதுவிளம்பிடும்பொருளெலாம்விளக்குமிடம்படுமிதயாகாசமற்றிதுவே யிறப்பொடுபிறப்பிலாதென்றுந் — இடம்படும்பிரமமாவது மாண்பாவதுந்தேகிகட்கெல்லாம் * சிவஞானசித்தியார் * சாக்கிரத்திலதீதத்தைப் பொருந்திடின்மற்றவரோ சகல சங்கமுடனிருந்துஞ் சங்கமிலாதவர்தம்—பாக்கியத்தை யின்னதெனப் பகர்வதுவென்னுயிரின் பற்றறுத்திட்டிடும்மையிலே பற்றற்றிங்கிருப்பா—ராக்கைமூடிகவித்துக்கொண்டறிவையர்களுடனேயனுபவித்தக்கிருந்திடினுமகற்பற்றற்றிருப்பர், நோக்கியிதுபுரியாதோர் புறப்பற்றுளுண்ணுனையவர்

பிறப்பினில்வினைகளுங்கிடாவே * என்றும்—மன்னவன்றன் மகன்வேட்
ரிடத்தே தங்கிவளர்ந்தவனையறியாது மயங்கிநிற்ப—பின்னவனுமென்மக
னீயென்றவரிற்பிரித்துப்பெருமையொடுதானாக்கிப்பேணுமாபோற்—
றுான்னியுவைம்புலவேடர்சூழலிற்பட்டுத்துணைவனையுமறியாதுதுயருறுந்
தொல்லுயிரை—மன்னுமருட்குருவாகிவந்தவரினீக்கி மலமகற்றித்தானா
க்கிமலரடிக்கீழ்வைப்பான்—என்றும்—சொரூபசாரம்— நனவிற்றசேந்தி
ரியநாட்டியங்கள்பார்ப்போர்— கனவின்மனக்கூத்தைக்காண்போ நனவி
ற்—சுழுத்தியிலேயில்லாதசூனியக்கூத்தாடி— விழுப்பொருளாய் நாமிருப்
போமே—என்றும்—தத்துவராயர்—ஞானவினோதன் கலம்பகம்—அலராயின
செய்யுமைம்புலன்காளெம்மருபகையாங் * கலகாள்பலகுணங்காண்மலங்
காள் கரணங்களென்னும் — பலகாளருட்சொரூபானந்தனார் பவளத்திரு
வாய் — மலராதளவுமன்றேவுங்களோ டெங்கள்வாழ்வுகளே—என்றும்—
போதசாரம்— கற்பிதப்பொருள்கடம்மைக் கடவுளாய்க்கருதித்தொ
ழிலே — யுற்பவந்தன்னினின்றே யுழைத்தனனெண்ணில்காலந் — தற்பரம்
பொருளாய்வந்ததம்பிரான்றொடாமுனே — புற்புதக்கணவிற்பொன்னாந்
தூண்செயக்கருதினேனே—என்றும்—அவிரோதவுந்தியார் — அகலுநீக்
கோவொன்றாலைம்புலனும்—மிசையுமேற்கேடெமக்குந்தீபற — வெங்ஙன
மெய்துமென்றுந்தீபற—என்றும், தத்துவராயர்அமிர்தசாரம்—சிந்தாகுல
மனிதர் சீசீசெவிமூதலா — மைந்தானுமீடழியவல்லாரோவைத்திலொரு—
வேட்கையசுணமியம்விட்டிங் கீன்வண்டினவகள்— கேட்கைதகவோவொ
ன்றின்கேடு—என்றும்—திருவாய்மொழி — ஆவிதிகைக்கவைவர் குமைக்கு
ஞ்சிற்றின்பப்—பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ — தாவியவையந்
கொண்டதடந்தாமரைகட்கே—கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதே—
என்றுந்திருவாசகம் * அடற்கரிபோலைம்புலன்களுக்கஞ்சியழிந்த வென்
னை * விடற்கரியாய் விட்டிடுதிகண்டாய் விழுத்தொண்டர்க் கல்லாற் *
றொடற்கரியாய் சுடர்மாமணியேசுடுதீச்சுழலக் * கடற்கரிதாயெழுநஞ்

சமுதாக்குங்கறைக் கண்டனே—என்றும் * கந்தரனுபூதி-கைவாய்கதிர்
வேன்முருகன்கழல்பெற் - றுய்வாய்மனனேயொழிவாயொழிவாய்மெய்
வாய்விழிநாசியொடுஞ்செவியா - மைவாய்வழி செல்லுமவாவினையே-என்
றும்-நாலடியார்-மெய் வாய்கண் மூக்குச் செவியெனப்பேர்பெற்ற-வை
வாயவேட்கையவாவினைக்-கைவாய் - கலங்காமற்காத்துய்க்குமாற்றலுடை
யார்-விலங்காதுவீடுபெறும்-என்றும் சிவஞானசித்தியார்-ஒருபுலனுகரு
ம்போதங்கொன்றிலேயொன்றின்பாலும் - வருபயன்மாறிமாறிவருந்திடு
மெல்லாமாயு-மொருபொழுதுணரினுண்டாமில்லை இவ்வல்லல்வாழ்க்கை-
மருள்கனவதுவும்போலமாயும் பின்மாயமென்றே—என்றும்-தேவாரம்-
ஒன்றிலேன்புலன்களைந்தும்வென்றவர்விளாகந்தனுட்-சென்றிலேனு
நலாமேசெந்நெறியதற்குஞ்செய்யே - னின்றுளே துளும்புகின்றேனீச
னைனீசனேயோ-வின்றுளேனுளையில்லேனெனசெய்வான் றோன்றினே
னே—என்றும்-படுகுழிபவ்வத்தன்னபண்டியைப்பெய்தவாற்றாற்கெடுவ
தும்மாயவாழ்க்கைகாண்டொறுங்கேதுகின்றேன் - முடுகுவரிதனுளைவர்
மூர்க்கரேயவர்களோடு - மடியனேன்வாழமாட்டே னாரூர்மூலட்டனுரே-
என்றும்-புள்ளுவரைவர்கள்வர்புனத்திடைப்புகுந்துநின்று-துள்ளுவர் சூ
றைகொள்வர்தூநெறிவிளையவொட்டார் - முள்ளுடையிவர்கட்கஞ்சி மு
க்கணான்பாதநீழ-லுள்ளிடைமறைந்து நின்றங்குணர்விறலெய்தலாமே-
என்றும்-பொய்யனைத்தையும்விட்டவர்புந்தியுள்-மெய்யெனச் சுடர்வெ
ண்மழுவேந்திய-கையனைக்கச்சியேகம்பமேவிய - வையனைத்தொழுவார்
க்கில்லையல்லலே—என்றும் - மூக்குவாய்செவிகண்ணுடலாகிவந்-தாக்கு
மைவர்தம்மார்ப்பையவிழ்த்து-நோக்குவானமை நோய்வினைவாரமேகாக்
குநாயகன்கச்சியேகம்பனே—என்றும்-திருவாசகம்-மாறுபட்டஞ்சென்
னைவஞ்சிப்பயானுன்மணிமலர்த்தாள்-வேறுபட்டேனை விடுதிகண்டாய்வி
னையேன்மனத்தே-யூறுபட்டேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே- நீறு
பட்டேயொளிகாட்டும் பொன்மேனிநெடுந்தகையே—என்றும்-இந்திரி
யவயமயங்கியிறப்பதற்கேகாரணமா-யந்தரமேதிரிந்துபோ யருநரகில்

வீழ்வேற்குச் - சிந்தனையைத் தெளிவித்துச் சிவமாக்கி யென்னையாண்ட வந்தமிலா வானந்தமணிகொடில்லை கண்டேனே — என்றும்-பரிபூரணப்பிரகாசம்-பந்தப்புரங்களொருமூன்றும் பரமனிடையேயிருப்பதெனிற்றெந்தப்புருஷனொருக்காலு நசியாததனாற்றுஞ்சா - னந்தப்பரமனே யவன்றனறியாமையினாலப்பரனைப் - பந்தப்படுமோர் சீவனெனப்பார்ப்பான் பவத்தேபதைக்கின்றான் — என்றும்- சொரூபசாரம்-கண்ணாற் கண்டதுண்டோகாதலாற்கேட்டதுண்டோ - விண்ணாலேதும்விளைந்துண்டோ-வெண்ணுங்காற்-கானலாறோடிவரக்கண்டது போற்றோற்றினுந் - தானலாதுண்டோசகம் — என்றும் - போகம்புவனம்பொருந்துமிடமெங்குமந்-தேகங்கரணந்திரியுமேயாகிலது - தன்னை நீயென்றுதயங்காதே நெஞ்சமே-நின்னை நீ கண்டறிந்துநில் — என்றும் - திருமந்திரம்-சீவனென்றுஞ் சிவனென்றும் வேறிலை-சீவனார் சிவனாரையறிகிலார் - சீவனார் சிவனாரையறிந்தபின்-சீவனார்சிவனாகியிருப்பர்-என்றும்-கடையவொழிந்திட்டிருந்தகனன்மரமடையவிழுங்கியதுவானவாறுபோ - லுடலிலொழிந்திட்டிருந்தசிவமுயிரடைய விழுங்கியது வானவாறே- என்றும்-தன்னையறியத்தனக்கொருகேடில்லை - தன்னையறியாமற்றானே கெடுகின்றார்-தன்னையறியுமறிவையறிந்தபின் - றன்னைவிட்டென்னை யினிதுணர்ந்தேனே - என்றும் - எல்லாமறிவதறிவுதனைவிட்டே - யெல்லாமறிந்துமிலாபமிங்கொன்றில்லை- யெல்லாமறிந்தவறிவினையானென்னி - லெல்லாமறிந்தவிறையெனலாமே-என்றும்-பொன்வண்ணத்தந்தாதி - ஒழித்தேன்பிறப்பினை யூர்ந்தேனறவைச்சேயோங்கிற்றுள்ள - மிழித்தேனுடம்பினையேலென்பிறரிடையிம்மனையும்-பழித்தேன்பழியேவிளைக்கும்பஞ்சேந்தியக்குஞ்சரமுந் - தெழித்தேன் சிவனடிசேர்ந்தேனினிமிகத் தெள்ளியனே-என்றும்-இருவம்மானை-மெய்யானதொன்றுமே மெய்ம்மைகாணம்மானை-மெய்யன்றிமற்றெல்லாமித்தைகாணம்மானை-என்றும் - கூறப்பட்டிருக்கின்றது.

வினா, இன்னுமெப்படியென்னில்,

விடை. சச்சிதானந்தசொரூபமாகியும் அகண்டத்துவமாகியும் அபரிச்சின்னத்துவமாகியும் சர்வவியாபகமாகியும் காலபரிச்சேத தேசபரிச்சேத வஸ்துபரிச்சேதாகிதமாகியும் நிராமயமாகியுமிருப்பதே ஆத்மசொரூபமென்றுசுருதிஸ்மிருதிகளும் உபநிஷத்துமகாவாக்கியங்களும் குருவாக்கியமுங்கூறப்படுகின்றது.

வினா. சத்தென்பதெப்படியென்னில்.

விடை, முற்பிறவிகளிற்செய்த நல்வினைதீவினைகளின்படி இந்தச்சரீரம் வந்ததென்று சொல்லுகையாலும் இப்போது செய்கின்றவினைகளுக்கினிமேற்பிறவிவருமென்பது சர்வானுபவமாய்க்கண்டிருப்பதினாலும் இப்படித்திரிகாலங்களிலுமுண்டான சரீரமாத்திரமழிந்து ஆன்மநித்தியமாயழிவற்றிருப்பதினாலும் சத்தென்பதாயிற்று,

வினா, சித்தென்பதெப்படியென்னில்,

விடை, பாலியாவஸ்தைமுதல்நடந்துவரும்விவகாரங்களிற்சிறிதுமறதியிருந்தாலும் மற்றவிருத்தாந்தமெல்லாம் அமாவாசையிருளும், மேகாந்தகாரமும் மழைநிசியுங்கூடியகாலத்திலும் மூலைவீட்டில்மூக்காட்டிட்டுக்கண்களைமூடிக்கவிழ்ந்துபடுத்திருக்கிற புருஷனுக்கும் சூரியசந்திராக்கினியின்மினி நட்சத்திர நேத்திரசாதனங்களொன்றுமின்றியிருந்தும் இன்னதின்னதென்று பகுத்தறியப் படுகிறதினால் சித்தென்பதாயிற்று.

வினா. ஆனந்தமென்பதெப்படியென்னில்,

விடை, தனதானியதாரபுத்திரர்களால்வருஞ்சுகங்களைநெடுநாளாய் ஒருக்கால்போலப்பலகாலுமனுபவித்து அதுகளால் வருஞ்சுகமெல்லாந் துக்கமாய்க்கைவிட்டுச்சுழுத்திசுகத்தைநேசதாநாடுகிறபடியால் ஆனந்தமென்பதாயிற்று,

இதற்குதாரணம்கைவல்யநவநீதம் - சென்மாந்தரஞ்செய்தவினைகளுடலுருமெனிற்செல்காலமிவனுண்டலோ - கன்மானுபவநரகசொர்க்க

மெனில் வருகின்றகாலத்துமிவனுண்டலோ - வுன்மாதயர்தனுவுடல்கட
வுளுடன்மனுடவுடன் மாறிமாறியழியுந்—தன்மாயவுடல் கெடினுமிவ
னிருப்பதுகொண்டுசத்தென்பதொக்குமகனே - என்றும்-இருளாகமூடு
ஞ்சுழுத்தியிலிராத்திரியிலிரவிசுடரற்றபொழுது - மருளாமலிருளையும்
பொருளையுந்தெரிகின்றவகைகொண்டுசித்தாகுமே— பெருவாழ்வுமிக்க
தானேதன்னிடத்தினிற்பெயராதபிரியமதனு-லிருகாதபிரியஞ்சுகத்தில்வ
ருமாதலா லானந்தமாமைந்தனே—என்றும் - சத்தேசித்தாகுமயலெனி
லசத்தாமசத்தானுற் சாட்சியெங்கே - சித்தேசத்தாகு மயலெனிற் சட
மாஞ்சடங்களுக்குத் - திதியுமில்லை — யொத்தேதோன்றிய சத்துஞ்சி
த்துநல்லசுகமாகு மூகத்துக்கோர் — வித்தேயன்னியமாகிற்சடம சத்தா
ஞ்சுகானுபவம்விளைந்திடாதே—என்றும் - வீயாதசத்துமூனம்விளங்கு
வதுதன்னுலோவேறொன்றுலோ— வாயால்வேறெனிலதுவுமசத்தோசத்
தோவசத்தேல்மலடிமைந்தன்-பேயாகாரியஞ்செயுமோ வசத்தெனவிப்
படியனைதயும்பிரித்துச்சொன்னு—லோயாதவவத்தையாங்குதர்க்கவிதற்
டங்களைவிட்டொழிந்திடாயே - என்றுங்-கூறப்பட்டிருக்கின்றது-ஓர்கிர
கம் ஓர்சரீரங்களைக் குறித்து அதற்குள்ளிருப்பவன்போற் கண்டமாகியு
ம்பரிச்சின்னமாகியும் ஓர்தேசவியாபகமாத்திரமாகியுமிருப்பதால்இனி
அகண்டமாகியும் அபரிச்சின்னமாகியும்சர்வத்தினுள்ளும் புறமும்வியா
பித்திருக்கும் சர்வவியாபகமாகியுமிருக்கின்றதலைவனாகியபிரமசொரூப
த்தையு மிந்தப்படியே விசாரித்தறியவேண்டியது,

வினு; அதெப்படியென்னில்,

விடை, அகண்டபரிபூரண வியாபகமாகியும் அபரிச்சின்னமாகியும்கால
தேசவஸ்துபரிச்சேதரகிதமாகியுமிருப்பதேபிரமசொரூபமெ
ன்றுசுருதிஸ்மிருதிகளிற்சொல்லுகின்றது.

விஞ, ஆகாசத்திற்கும்இந்தக்குணங்களிருக்கிறபடியால் அதுவேபிரம மென்றுசொல்லலாமேயென்னில்,

விடை, ஆகாசமானது நான்குபூதங்களிலும்நிறைந்து சர்வவியாபகமாய் நிரவயமாயிருந்தாலும்சிருட்டிகாலத்துண்டாகிப் பிரளயகாலத் திலழிந்துபோவதினால் காலபரிச்சேதம்வரும்,

விஞ, காலமேபிரமமென்றுசொல்லலாமேயென்னில்,

விடை, காலமானது ஏகவியாபகமாய் நிரவயவமாய்எந்ததேசத்திலும் வி யாபித்திருந்தாலும்தேசாசாரங்களால்காலக்கிரியைகளும் அதனு லுண்டாகும் பொருள்களுமாறியழிவுவருகிறபடியால் காலத்திற் குந்தேசபரிச்சேதம்வரும்,

விஞ, தேசமேபிரமமென்றுசொல்லலாமேயென்னில்,

விடை, தேசமானது எங்கும்வியாபித்திருந்தாலும் ஒருதேசத்திலுள்ள வஸ்து ஒருதேசத்தி லில்லாமையினால்தேசத்திற்கு வஸ்துபரிச் சேதம்வரும்,

விஞ வஸ்துவேபிரமமென்றுசொல்லலாமேயென்னில்,

விடை, வஸ்துவானது வியாபகமின்றிக்கண்டமாய்பரிச்சின்னமாய் அவி த்தியமாயிருப்பதினால் வஸ்துபரிச்சேதமும்வரும்ஆகையால்கா லத்தினால் ஆகாசத்திற்கும் தேசத்தினாற்காலத்திற்கும் வஸ்துவி னால்தேசத்திற்கும் அழிவுவருகிறபடியால்இவைகள் பிரமசொரூ பமாகமாட்டாது,

விஞ, ஆனால்பிரமசொரூபமெவ்வகைப்பட்டதென்னில்,

விடை. தேகேந்திரியாதிகரணங்களும்அவற்றின் தொழில்களுமின்றிக்கா லதேசவஸ்துபரிச்சேதாகிதமாய்அகண்டபரிபூரணமாய் அபரி ச்சின்னமாய்சின்மாத்திரமாயிருக்கின்றஅறிவுவியாபகமேபிரம சொரூபம்,

விஞ, பிரமத்திற்குத்திரிவிதபரிச்சேதமுமில்லையென்பதேதெனில்.

விடை, எந்தக்காலத்திலும் எந்தத்தேசத்திலும் எந்தவஸ்துவிலும் உள்ளும்புறமும் எள்ளிடைவிடமின்றிச் சர்வவியாபகமாய் அறிவறியாமையற்று ஜெகசித்திரபடம்போலும் பர்வதம்போலுமசைவற்று நிஸ்சலனமாயிருக்கிறபடியால் திரிவிதபரிச்சேதமுமில்லை என்பதே துணிவு - இதற்குதாரணம்-மெய்ம்மொழி. பொன்னைத்தான்கண்டபேர்கள் பணியெனப்புகலார்போல - மன்னித்தானுடன்மயக்கு மாயதத்துவங்களாய்நீதே-புன்னைத்தானறியவின்பவுருவு கைதன்புமாகுந்-தன்னைத்தான்கண்டவர்க்குத்தானென வேறுமுண்டோ - என்றும்-மூலசித்தி-என்றுமெக்காலமெங்குமியாருளுமிறைவனீயே-யின்றிமற்றொன்றுமின்றி யிருந்தவாறிருக்கவிங்ஙன் - பின்னைமற்றுளவாய்ப்பேணியிதமிகப்பெய்த்தேதோமிச்-சென்றிடச்செய்ததேயவ் விச்சையென்செப்பிடாயே - என்றும் - மகாவாக்கியம் - இக்குணங்களுடையபரப்பிரமமேநாமானோமெவ்வாறென்னி-னெக்ககளுதியெனச்சனிப்புமரிப்பின்மையினானித்யமானோந்தொக்குடம்புபோலமலத்தின்றுவக்கதின்மையினாற்சுத்தமானோ-மூட்காரணம்போனசிக்குமறிவுபெருமையிற்புத்தருடைத்துநாமே - என்றும்-அகங்காரவிருத்தியெனப்பந்தமிலாமையின்முத்தமானோமிந்தச் — சகம்போலவினைக்குமிந்திரசாலமிலாதிருக்கையினாற்சத்யமானோஞ் - சுகங்காணிற்றன்னையலாற்சுகமில்லையென்றேபரமானந்தமானோ- மிகுங்காலதேசவஸ்துவெனப்பிரியாவானந்தவேடநாமே - என்றும்-தத்துவப்பிரகாசம்- மூன்னைநற்கருதியோதிமுடிவுறற்கரியதாக - வின்னமத்தேவர்மூவரொய்துநற்றிடமோமேவத்-தன்னையிப்படியேகாணத்தானளித்தெனக்கோர்வார்த்தைசொன்னநற்சொரூபானந்த சோதியைத்தொழுதல்செய்வாம் - என்றுங்கூறப்பட்டிருப்பதால் இதுவேபிரமாணசித்தம்,

வினா, ஆத்மாவிகாரமின்றி நிர்விகாரியாயிருக்கத் தேகேந்திரியாதிகள் தொழிற்படுவதானால்அதுகளுமோர்வஸ்துவென்றுதுவிதவாதிகள் சங்கிப்பார்களேயென்னில்.

விடை, காந்தக்கல்லானது அசைவற்றிருக்க அச்சந்நிதானபலத்தினால்சடமானஊசிசேஷ்டித்து அக்காந்தர்த்தைப்பாய்ந்து பிடிப்பது

போலும் சூரியனிச்சையின்றியிருக்க அச்சந்நிதான பலத்தினால் சடமா
ன சூரியகாந்தக்கல்லிலக்கினி ஜெனித்து அதனால்பாகாதிகிரியைகள் நடப்
பதுபோலும் ஆத்மப்பிரகாசத்தினாற்பிரதிபலித்தசாயையானது விருத்
திரூபமாய்சாக்கிரசொப்பனங்களிலுள்ளவிடயங்களை இந்திரியாதிவழிக
ளாலறிந்துவிவகரிக்கின்றது சுழுத்திமூர்ச்சைசமாதிகளில் விருத்தியின்
மையால்ஒருஅறிதலும்விவகாரங்களுமில்லை ஆத்மசந்நிதான பலத்தாற்
றொழிற்பட்டதன்றியிந்திரியாதிகள்சடமேயாம்,

இதற்குதாரணம்-சிவஞானபோதம்-கடக்குஞ்சரம்பண்ணியுண்ணிமீ
றொருத்தன்கைபாதகன்னங் கண்மெய்போலியக்குங் - கிடக்கும்நடத்தா
விடத்திவ்வுடம்புங்கிடக்குமொருத்தனடத்தாவிடத்தே* என்றும்-நிழ
ற்பாவைகண்ணாடியிற்பாவைகைகா - விதிர்க்கும்முடக்குமிவன் செய்யு
மெல்லாந் - தொழிற்பாலதாமிந்தவுடலுஞ்செய்தொழிலுஞ் - சுடர்ஞான
வடிவானவன்செய்ததொழிலே* என்றும்-கைவல்யநவநீதம் - செய்கையு
ஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தச்சிலைமலைமுன் னிரும்புகள்சேட்டிக்
குமாபோற் - செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்குமென்முன்சட
மானவுலகமெல்லாஞ் சேட்டைசெய்யு - மெய்கலந்தவிந்திரியவிகாரரூப
விவகாரவிருத்திகளும் விருத்திதானும் - மெய்கலந்தசமாதிக்குஞ் சாட்சி
யேநான்வெயில்போலென்றுரைத்தவனேவிபுமாகர்த்தன் * என்றுங்கூ
றியிருப்பதினால்இதுவேபிரமாணசித்தம்,

வினா, இந்திரியாதிகள் தொழிற்படாது சடமாயிருந்தாலுந் துவிதமே
யன்றி அத்துவிதமல்லவென்றுசொல்லுவார்களென்னில்,

விடை, தொண்ணூற்றாறுதத்துவமென்பது சகலமதத்துக்கும்பொதுவெ
ன்றும்சைவர்களுக்கு (௩௬) வேதாந்திக்கு (௨௮) மாயாவாதி
க்கு (௨௫) வயிணவனுக்கு (௨௪) தத்துவங்களென்றும்பின்னும்பதி
னெழுதத்துவமென்றும்பத்தொன்பதுதத்துவமென்றுஞ்சொல்வதெல்
லாம்சொன்மாத்திரமேயன்றிப்பஞ்சதன்மாத்திரையைத்தவிரக்காலத்திர
யத்திலுமில்லை - எப்படியென்றால் சத்தமென்றறிகிறபோது சத்தமும்

சத்தமென்றறிந்தவறிவுமாத்திரமன்றிச் சமானவாய்வு சோத்திரேந்திரியம்வாக்கிந்திரியம்வசனாதிவிடயங்களுமில்லை-பரிசமென்றறிகிறயோது பரிசமும்பரிசமென்றறிந்த வறிவுமாத்திரமன்றி மனம்வியானவாய்வு தொக்கிந்திரியம்பாணீந்திரியம்தானாதிவிடயங்களுமில்லை-ரூபமென்றறிகிறயோது ரூபமும்ரூபமென்றறிந்த வறிவுமாத்திரமன்றி புத்தி உதானவாய்வுநேத்திரேந்திரியம் பாதேந்திரியம்கமனாதிவிடயங்களுமில்லை - ரசமென்றறிகிறயோது ரசமும்ரசமென்றறிந்தவறிவுமாத்திரமன்றிச் சித்தம்அபானவாய்வுசிங்குவேந்திரியம் உபஸ்தேந்திரியம் ஆனந்தவிட யங்களுமில்லை- கந்தமென்றறிகிறயோது கந்தமும் கந்தமென்றறிந்த வறிவுமாத்திரமன்றி அகங்காரப்பிராணவாய்வு கிராணேந்திரியம் குதேந்திரியம்மலவிசர்க்காதிவிடயங்களுமில்லை இந்தப்படி தன்மாத்திரைகளைத்தவிர வேறேதத்துவங்களில்லாமையாலும் தன்மாத்திரைகளைப்பிரத்தியேகம் பிரத்தியேகமாய்ப்பிரித்துப்பார்க்க அதுகளுந்தனியே ஒன்றைவிட்டொன்றில்லாமையினாலும் ஐந்து மொன்றாகவேயிருப்பதினாலும் இதுகளுக்குக்காரணமானவிட்சேபசத்தியும்விவேகித்தவிடத்தில்லாதிருப்பதினாலும் அந்தவாவரணமும்ஒன்றுந்தெரியவில்லை யென்றறிந்த வறிவுமாத்திரமாகி அறியேனென்றஅஞ்ஞானம்நசித்துவிட்டது பின்னுந்தனக்குள்ளேசகலதத்துவங்களுந்தோன்றி வளர்ந்து ஒடுங்குமதென்று கண்டவறிவேமகாகாரணமான மூலப்பிரகிருதி அதுவுஞ்சொன்மாத்திரமேயன்றி ஒருபொருளல்ல,

வினா. அதெப்படியென்னில்,

விடை, தன்னிடத்தொன்று உண்டானால்லவோ இருக்கவேண்டும் இருந்தாலல்லவோலயிக்கவேண்டும் அப்படி உண்டாகவுமில்லை வளரவுமில்லை லயிக்கவுமில்லையென்றறிந்த வறிவுமாத்திரமாயிருப்பதேமூலப்பிரகிருதிரகிதமான பிர்மசொரூபம்,

இதற்குதாரணம் - தத்துவராத்தினாகாம் - தத்துவம்பலவெனச்சாற்றுவார்சிலர் — பித்தர்களினுமிடம்பேசவேண்டுமோ = வத்துவின்வடி

வலதன்றிநிற்றபின் - னெத்தனைதத்துவயின்னமின்மையே * என்றும்-இந்தியமிருபதோடிரண்டெனத் - தந்திரமோதுவர்சார்ந்தமேலவர் - இந்தியம்பலவென விசைத்தபோலாம் - வந்ததுடலினமா மனோவிகாரமே * என்றும் - வேறு-கோடித்தத்துவமென்னிலுங்கோதிலா - நீடுதற்பரநின்றதுமற்றவை -யோடகித்துசித்தாதிரூமண்மையிற் - பீடுறப்பல பேசல்பிதற்றலே * என்றும் - போதாமிர்தம் - பன்னுவர்பலபலதத்துவங்களை - மன்னிய பரமுணராதமாந்தர்க - டன்னிலே தனையுணர்கின்றபோதினி - லன்னியமிது வெனவறையலாவதே * என்றும்—கோலுமாத்திலாறாறுமிழிகொள்ளைநீர் - வேலையிற்பிறிதென விளம்பலாவதோ-சாலுதத்துவம்பலசாற்றுமாயினும் - மூலநற்சிவமதேருமடிவினுள்ளதே * என்றும்-சிவப்பிரகாசதரிசனம் - ஒன்றதென்றிடலாவதுமொன்றற-நின்றதத்துவநின்மலபோதமே - பின்னையொன்றுளதென்றல்பெருமையின்-யென்றுவேதமியம்பியதல்லவோ * என்றும்-மூதுமொழி-தத்துவத்தினைபுணருந்தலைவரா - யொத்ததம்மிலொருவனென்றுள்குவார்-நித்தநிர்க்குணநின்மலனென்றுளா-ரத்தனுக்குமவர்நரகெய்துவார் * என்றும்-சமயசூடாமணி-வடம்படக்கோத்தமணி நூலைநூல் போன்மன்னுயிராக்கைகட்கெல்லா-மிடம்படக்கோத்து நின்றதங்கொண்டேயெனுமிடமேமறைகளின்பாரிற் - கடம்பலபேதப் பட்டயாத்திரமே கடத்திலுளாகாசப்போலு-மூடம்பினிலொளியைப்பார்த்தபோதெல்லாமொருவனேயன்றிவேறுளதோ * என்றும்-சொரூபசாரம்-பூதாதியைந்தும் பொறிபுலன்களெல்லாஞ்சித்-தேதாதியத்தமனையெல்லாஞ்சித்-தோதரிய-கற்பனையுஞ் சித்தலாத்துங்காண்பானுங்காட்சியுஞ்சித் - தற்பரம்வேறில்லாமையால் * என்றும்-பார்த்ததிசையெல்லாம் பரிபூரணசொரூபந் - தீர்த்தமெல்லாமானத்தசிற்சொருபங்கீர்த்திக்குந்தோத்திரங்களெல்லாஞ் சசொரூபநம்மையால்-வேற்றுருவமேதாகுமே * சிற்சொரூபந்தானேசகசொரூபமானவெலாந் - தற்சொரூபசாரமாச் சாற்றலே-பொற்சொரூப-மச்சுருவம்போலவுருவாய்த்தோற்றமொரு-சொச்சொரூபந்தானேதுணை * என்றும்-வாசிட்டம்-உவரிநீர்போலுலகெல்லா மொன்றெனவுலைரவுமாத்

திரமதுதானுற்றபந்தி - கவர்வுறுதலாலசையுநீரைறயுநீர்தான்கல்லோலத் தாலசையுங்கணக்கேபோலச் - சிவருணர்வுமாத்திரமேபிரமமாதி நிகழ் பெயராய்ப்புகல்பொருளைச் செகமென்றெண்ணித் - தவமறுபேதையர் காண்பாரிவுதானே சற்றசைந்தமாத்திரத்திற்சருக்கமுண்டாம் * என்று ம்-பெருப்பெரியவடிவான பிரமமேயாதலாற்பிறிதொன்றில்லை - வரும் பொருளெல்லாம் பிறிவின்கணதையாயி நத்தலிலிவ்வையமெல்லாங் - கரு ம்புயமேயுதிவேயாங் கற்பனைவேறில்லையாற் காணப்பட்ட - வரும்பொ ருள்கட்கிலதிவுண்டாதலினாலறிபொருளாமனைத்துமில்லை * என்றும்-அ வதூதகீதை - சுலோகம் * சர்மம் சூன்யம் மனஸ்சூன்யம் சத்தா சத்யவி த்யமேந - சோபாவாபாவிதம் புரோக்தம் சாஸ்த்ரசம்மதி பூர்வகம்-என் றாங்கூறப்படுகையாலிதுகளே பிரமாணசித்தம்.

விறு. இப்படிதுவிதவஸ்துவின்றித்தானே தானாயிருக்கிறதன்னிடத்தி ல்துவிதபாவனைகளான விபரீதங்களெப்படியுள்ளதாகத்தோற்றி யுதென்னில்.

விடை. இல்லாதவஞ்ஞானத்தோற்றமானபுலன்வழிகளால்காலத்திரயத்தி லுமில்லாதசுத்தமித்தையான விபரீதபாவனைகள் இல்லாதகானத் சலம்போ லுள்ளதாகத்தோற்றியது.

விறு. உள்ளவஸ்துவிலுள்ளது தோற்றுமேயன்றி இல்லாது தோற்று தேயென்னில்,

விடை. உள்ளஇரும்பில் இதுஆயுதமெனத்தோ றறியது இல்லதாவாயுத ந்தோற்றுமா உள்ள இரும்புதானே தோற்றினது உள்ளபொன் னில்இது ஆபரணமெனத்தோற்றியது இல்லாதவாபரணந்தோற்றுமா உ ள்ளபொன்தானேதோற்றினது - உள்ளமண்ணில் இதுகடமெனத்தோற் றியது இல்லாதகடந்தோற்றுமா உள்ளமண்தானேதோற்றினது - உள்ள மரத்தில் இதுகரிபரிகளெனத்தோற்றியது இல்லாதகரிபரிகள்தோற்றுமா உள்ளமரந்தானேதோற்றினது - உள்ளசமுத்திரத்தில் இது அலைநுரைகு மிழியெனத்தோற்றியதுஇல்லாதஅலைநுரைகுமிழிதோற்றுமாஉள்ளசமு

த்திரந்தானேதோற்றினது - உள்ளஆகாசத்தில் இது நீலபீதமெனத்தோற்றியது இல்லாதநீலபீதவர்ணங்கள்தோற்றுமா உள்ளஆகாசமேதோற்றினது - உள்ளகட்டையில் இதுகள்ளனெனத்தோற்றியது இல்லாதகள்ளன்தோற்றுவானா உள்ளகட்டையேதோற்றினது - உள்ளபழுதையில்இதுபாம்பெனத்தோற்றியது இல்லாதபாம்புதோற்றுமா உள்ளபழுதையேதோற்றினது இந்தத்திஷ்டாந்தங்களைப்போலசச்சிதானந்தசொரூபமானதன்னிடத்தில் இது நாமரூபமெனத்தோற்றியது உள்ளசச்சிதானந்தமேதோற்றினதன்றிக்காலத்திரயத்திலு நாமரூபந்தோற்றவேயில்லை.

வினா, அதெப்படியென்னில்,

விடை, இருக்கின்றது சத்து அந்தச்சத்துதானே நாமரூபமான சித்தாய்த்தோற்றியது அந்தச்சித்தைவிட நாமரூபமென்பது காலத்திரயத்திலு மில்லாமையாலும் சத்தைவிடச்சித்தென்பதுவேறேயில்லாமையாலும் இரண்டாம் வஸ்துவில்லை அந்தச்சத்துக்குஞ் சித்துக்குமிடையேயுள்ள ஆனந்தமானசுகந்தோற்றமாட்டாது.

இதற்குதாரணம்-வாசிட்டம்-ஆகலினாலிதொன்றுஞ்செய்ததல்லவடுத்துளவிச்சகமில்லை யறிவுமட்டு - மேதகுசங்கற்பமேவேதாவாகுமெய்யாகவறிவன்றிவேறொன்றில்லைச்-சேதனமாத்திரத்துதித்த சிருட்டியந்தச்சேதனமேவடிவென்று செப்பலாகு மோதியசெய்வோன் பொசிப்போனிரண்டுமல்ல வநுபவந்தீர் பிரமமேயுள்ள வெல்லாம் * என்றும்-பொருகடலிற்றிரைமுதலாய்ப்பிறந்தவெல்லாம்புனலாகி விளங்குமாற்புழுதியாம்மா—யொருபொருளாம் பிரமமாத்திரமே யல்லா லுபயமெனுங்கற்பனைப்பேரொன்றுமில்லை—யெரியிடத்திற் சூடுமாத்திரமேயல்லாலிரண்டுண்டோவவ்வகைபோலென்றுமொன்றுஞ்—சரியைகிரியா யோகஞானத்தின்முத்திசாதனங்கணிறைந்தவர்க்கே சாற்றல்வேண்டும் * என்றும்-அத்துவிதவுண்மை-தங்கமொன்றேபணிகளிற் சாற்றும்விதங்கள் செவ்வேறு—தங்கவிலக்கணமு மன்று தங்கந் தவிரவேறன்று—தங்கமழியாப்பணியழியிற் சாற்றுமிந்தத்தகைமைபோ—லெங்குநிறை சச்சிதானந்தமில்லதிந்தவுலகமே * என்றும்— தங்கமொன்றேபணிகளிற்சாற்றும்

விதமாய்விளங்குமவி—னங்கமுதலாஞ்சகங்களாயறிவே விளங்குமயலில்லை—இங்கங்கென்றே பங்கொன்றுமில்லை யகண்டவறிவொன்றே—ஆங்கவறிவுதோன்றளவுந்தோன்றுநாமரூபம் * என்றும்- கைவல்யநவநீதம் - கானனீர்கிளிஞ்சல்வெள்ளி கந்தர்ப்பநகர்களூர்—வானமை கயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு—ஏனமாந்தறியுமாணிற் பிரபஞ்சமெல்லாம்பொய்யே—ஞானமெய்மகவேயுன்னை நம்மானை மறந்திடாயே * என்றும் - பிரமாணங்களிருப்பதினால் காலத்திரயத்தி லும்மாயை தோற்றமாட்டாதென்பதே துணிவு.

வினா, மித்தையான நாமரூபங்கள் காலத்திரயத்திலுமில்லாத அகண்ட சச்சிதானந்தசொரூபமாத்திரமாயிருக்க இந்தச் சனனமரணமுதலானதாபத்திரயங்களும் ஜீவேசுரபேதங்களும்பந்தமோட்சங்களுமுள்ளதாகத்தோற்றிய தெப்படியென்னில்,

விடை, ஆத்மாவே தேகேந்திரியாதிகளென்றும் தேகேந்திரியாதிகளே ஆத்மாவென்றும் விபரீதமாகக்கண்டதேயஞ்ஞானம் அவ்வஞ்ஞானத்தினால் ஆத்மாவாகியதன்னை அசத்தாகிய நாமரூபங்களாய்க்கண்டபோதே அத்துவிதமறைந்து துவிதபாவந்தோன்றியது.

வினா. அதெப்படியென்னில்.

விடை. மேகமறைவாயோடச் சந்திரனோடுவதுபோலும் சலமசையநீச்சலமான்சந்திரனசைவதுபோலும் ஓடமேறிப்போகிறவனுக்குக்கரையிலிடத் தசைவற்றிருக்குமரம் ஓடிவருதல் போலும்பித்தமேறிய கட்சுழலினால் சுழலாதவீடுவாசல் சுழல்வதுபோலும் கொள்ளிக் கட்டை சுழற்றினால் சூரியவட்டமாய்த் தோற்றுவதுபோலும் காற்றுடி கயிறுயிருந்தும் சக்கரமாய்த்தோற்றுவதுபோலும் கானலாறோடச் சலமோடுவதுபோலும்-கண்ணாடியினது ரசாரோபத்தினால் சலமிருக்குமிடஞ்சலமின்மையாகவுஞ்சலமின்றியவிடஞ் சலமுள்ளதாகவுந்தோற்றுகிறதுபோலும் ரசக்கண்ணாடிக் கெதிரிருந்த வீடுவாசல்கள் பிற்புறந்தோற்றுவதுபோலும் அஞ்ஞானத்தினால்நாமரூபமான துவிதபாவந்தோற்றியது.

இதற்குதாரணம் - அபரோட்சாத்மானுபவதீபிகை,

ஆன்மாவைத்தான்றேகமென்று மறிந்தார் பொன்னைப் பணியென்றூர்-மானநிசமுண்டாய்த்தானே மண்ணைக்கடமாய்நிச்சயித்தா—ராலதற்மையுப்படமென்றேயற நிச்சயித்தாராதுபோலுமானமூடமதனாலே யான்மாத்தேகமெனவறிந்தார் * என்றும்—அறியுமணியை நெருப்பென்றுமறிந்தார்போல மூகிலோடச்—செறிசந்திரன்றானோடுதல்போற் செலமேயசையச்சந்திரன்று—னறியவசையுதென்றற்போ லஞ்ஞானத்தாலான்மாவைப்—பிறியாதேகமாயறிந்தார் பின்னமான வவித்தையினால் * என்றும்—அவித்தையினாலே யான்மா விடத்தினிற் றேகமென்று—நவிற்றியவத்தியாச நாமமுண்டாயிற்றென்றே—யவித்தைபோய் விவேகந்தன்னால்றியவே சீவான்மாவந்—தவித்திடாப்பரமான்மாவு மயிக்கியந்தாவரங்கள் * என்றும் - கூறப்பட்டிருப்பதினாலும் இப்போதும் ஞானதிருஷ்டியாய்ப்பார்த்தவிடத்தில் பார்க்கிறவன் பார்க்கிறது பார்க்கும் பொருளாகியமூன்றும் பஞ்சப்புலன்களோடழிந்து ஆதித்தப்பிரகாசத்தினுள் தீபப்பிரகாசமடங்கினது போலும் சூரியப்பிரகாசத்தினுள் பூதவிருளடங்கினதுபோலும் அறிவாகிய பெருங்கண்ணைமறைத்த ஆணவப்படலம் நீங்கும் அப்போது நாமரூபாத்மகமான சகலதேகாதிப்பிரபஞ்சங்களுந் தனக்குள்ளொடுங்கித் தானேதானா யெதிர்த்து விளங்கும் இதற்குதாரணம். அபரோட்சாத்மானுபவதீபிகை - பார்க்கிறவன்பார்க்கிறது பார்க்கப்படுகிறது—மேற்குமிவைமூன்று மெவ்விடத்திலில்லையோ —மார்க்குமவ்விடத்ததிட்டிதான் பண்ணுவதீதார்க்குஞ்சமதிட்டியாம், என்றிருப்பதினாலிதுவே பிரமாணம்.

வினா. சகலபிராரத்தபோகங்க ளிருக்குமென்றும் ஞானம் வந்தாலும் பொசித்துத்தான் றொலைக்கவேண்டுமென்றும்சகலசுருதிஸ்மிருதிகளுஞ்சொல்லுவதன்றி நமக்குமனுபவமாயிருக்க வஸ்துத்துவயமில்லையென்றுசொல்லுவதெப்படியெனின்,

விடை. பிராரத்தபோகம் அஞ்ஞானதிருஷ்டியினால் அப்பியாசகாலத்தினுண்டு, தத்துவ ஞானவுதயத்தி லில்லையென்றும் அப்பியாசிக

தேகப்பிராரத்தமன்றி ஆரூடனுக்கில்லையென்றுஞ் சுருதிஸ்மிருதிகள் சொல்லுகின்றன நமது அனுபவமுமப்படியேயாம்.

விஞ. அதெப்படியென்னில்,

விடை. விழித்தவனுக்குச்சொப்பனமசத்தானதுபோல யதார்த்தஞானத்தில்தேகாதிகளசத்தாய்ப்போகிறபடியால் ஆரூடனுக்குப் பிராரத்தமில்லை அவனுக்கு அதீதமாகிய பிரமப்பிரகாசமொன்றுமே யேகமாய்விளங்கும் ஆதலாலந்தச்சொரூபமே நீயாகுமென்பதிற் சந்தேகவிபரீதங்களின்றி அத்துவிதசின்மாத்திரமாயிருப்பாயாக இதற்குதாரணம்.

அபரோக்ஷாத்மானுபவதீபிகை — ஞானம்வந்தாலுந்தானே நவில்பிராரத்துவத்தைத-னாளது பொசித்துத்தீரவேண்டுமென் கின்றசாஸ்த்ரந்தானுமப்பியாசிக்கன்றித் தத்துவஞானிக்கில்லை-யானதத்துவக்கியானவுதயத்தேபிராரத்தங்கள் * என்றும்— உதயத்தேபிராரத்தமென்றொன்றிலலைதேகந்தானு !- மதேயசத்தாகையா லுமதெப்படியென்னிற்றென்கே-ளுதயத்தேவிழித்தவர்க்குச்சொப்பனமசத்தானற்போ-லுதயத்தேபிராரத்தங்களொன்றுமான்மாவுக்கில்லை - என்றும்—இல்லையேற்சென்மகன்மமில்லையோவென்றாலான்மா - வல்லேபஜென்மாகித ராகையாற்சென்மாந்தத்தின் - வல்லமைபிராரத்தத்தால்வருகின்றஜென்மமும்பொய்-யெல்லையிற்றேகஞ்சென்மமாச்சுதேயென்றாற்றேகம். என்றும்தேகமுமுயற்கொம்பைப்போற் றோர்ந்திடிவில்லைகண்டா - யேகமாமாத்துமாவினித்திற்சொப்பனதேகங்க - ளாகவெப்படியாரோபமாச்சுதோவதுபோற்போமால்— தேகமுமாத்துமாவிற்றேறிலாரோபமாகும் * என்றும்—வாசிட்டம்— அந்தமற்றொன்றாய் விகற்பமற்றழிவாயழிவிலாப்பழம்பொருளிருக்கப்— பந்தமுற்றவரார் முத்திபெற்றவரார்பாவனை விகற்பமேயனைத்துஞ்— சிந்தனை விரிவுபந்தமாம்தனைத்தீர்ந்திடன்முத்தியாமனத்தின்—றொந்தலீலையினாற்றாரமாமணித்துந் தாரமுமண்ணிதாய்த்தோற்றும் * என்றும் — இவையெனுமனைத்துஞ்சிற்கனமாகியிறப்பிலாப்பிரமமேயென்று— நவையறுமனமாங்கற்பனையில்லை நாசமும்பிறவியுமென்னு —மவையெலாம்புனையுமன்றினுமில்லையறுவகைவிகாரமுமில்லைக்— கவையு

றுசமமாங்குறிபெறுமறிவு மாத்திரங்காணநின்றுளதால் * என்றும் - அ
த்துவிதவுண்மை - இல்லாமையதங்கணிலேபாருநிற்கவம்மமை — பொல்
லாப்பிறப்பிற் பட்டதுமாய்ப் பொக்கமிகவுந் தவிர்ந்ததுமாய் - நல்லா
ரிணக்கஞ்சேர்ந்ததுமாய் ஞானவிசாரமூகித்ததுமா - யெல்லாமாம்வி
டைந்ததுமாயார்க்குங்காட்டிமறைந்திடுமே * என்றுங்-கூறப்பட்டிரு
க்கின்றதால்இப்படிதானாய்விளங்கிய நிலையிற்கிஞ்சித்தேனு மசம்பாவனை
நேரிடுமானால்அவ்வசம்பாவனையானது குருவினாலுஞ்சாஸ்திரங்களினாலு
ந்தீரமாட்டாது இந்தஅசம்பாவனையுள்ளவனே - சுவானுபவத்திற்சந்தேக
ம்பிறந்துதீர்க்கநிலைகொள்ளாமல்தவறுகையினால் ஆத்மத்துரோகியென்
றும் பிரமத்துரோகியென்றும் சொல்லுவதன்றி இதைப்போக்குதற்கு
மேலனுபவமுஞ்சாத்திரங்களு மில்லாமையினால் இந்தத்துரோகமொன்
றினாலு நீங்கமாட்டாதென்று நான்கு உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன
இதற்கு உபநிஷத்பிரமாணம் * சுலோகம் * சத்தியம்சத்யம் புனஸ்சத்
தியம் சம்சயாசம்சயாகெதிநாஸ்தி - அதோ அதோசம்சயோகதிதேவபு
த்ரா நாஸ்தி நாஸ்தி - சம்சயோகதிரவுரோப்பிரவுரவோப்பிரவுரவோ
இகபர நாஸ்தி நாஸ்தி - பலோற்பவவாக்கியோசம்சயாகதி நாஸ்தி நாஸ்தி
* என்றுங் - கூறப்பட்டிருக்கின்றதால்அசம்பாவனைக்கிடமாகிய இதரசா
ஸ்திரங்களைப்பார்க்கலாகாதுபார்த்தபோதிலும் தனதுயதார்த்தமாகிய சு
வானுபாவத்திருஷ்டிவிடாமலிருந்துபூர்வபட்சமாயெண்ணிச்சாவதானமா
ய்ப்பார்த்தறியவேண்டியது * இதற்குதாரணம் - சிவஞான நிலயம் - த
ன்னெஞ்சத்தனக்குச் சான்றதுவாகத்தத்துவ நன்குணராதே — வன்னெ
ஞ்சனுக்கிக்கூடமேபுரியோன்வஞ்சகக்கூற்றினுங்கொடியோன் — பன்னு
ங்காலவன்றன்றரிசனம்பரிசம்பழுதுறநிரயவேதுவுமாம் - புன்னெறி
சாலவனும் போய்நரகெய்திப்பூமியுள்ளளவுமேனுல் * என்றும் - ஞா
னமாயிலிங்கந்தம்முளத்தின்றி ஞானிகள்வேடமேமருவி - ஊனதேவளர்
த்தங்குண்டிமைதனத்தின்பொருட்டினுலிழிதருகின்ற - ஹீனமாஞ்சோ
ரஞானிகளிரயமெய்துவரெய்தியாங்குழைத்துத் - ஹீனமாந்திரியக்கியோ
னிடோறுஞ் செனிப்பது மரிப்பது மாவார் * என்றும் - ஞானசித்தி

மறைமுதற்கலைகளியாவையுமுணர்ந்து மாசறவுணர்த்துமாசொடுந்தான்-கறையுறும்விடயக்கருவெனுங்கடலிற்கருத்தழுந்தின்விழுமாகி - லறைதருமவனேகன்மசண்டாளனறிவறவிருமையுமிழந்து - பொறியிலிபவனைப்போலும்பாதகரிப்புவியினிலொருவருமிலையே * என்றும் . சாதிசண்டாளன் கதிபெருந்தருமம்வழுவிற்கன்மசண்டாள - னோதியவழிகளொன்றினுங்கதிதானுற்றிடானென்பதுண்மையே - நீதியாங்கருமம்விட்டுஞானத்தேறிச்சமர்நிலைபிறழ்ந்தவர்போற் - றீதுறவொழுகுஞ்சோரமேயென்றாற்றீக்கதியுறுகலோதிடமே * என்றும்-ஞானசாரம்-வேதவாகமங்கண்மிருதிநூல்புராணமிக்கவெக்கலைகளும்பயின்று - போதமேசொல்லிப்போதமங்குணராப் புலையருக்கழுதையுநிகராங் - கோதிலாவாரங்குங்குமம்பளிதங்குலவியபுழுகடைப்பொதிதா - னேதமேசுமந்தகழுதையிங்கிவனினேற்றமாம்வஞ்சமின்மையினால் * என்றும் - கிழுறு கருமமேவியபதத்தோன்கிளர்தவவேள்வியாங்கடையின்வாழ்பங்குயர்ந்தோனென மறைமுழத்து மற்றவனைப்பதமழியி-னூழியநரகமலதிலையெனுமாலிவனுச்சிரமுமற்றழிந்தோன் குழுறம்பதிதனுமிலனவன்பேர்சொல்லினும்பஞ்சபாதகமே * என்றும்-மெய்ம்மொழி கொலைமுதலைம்பாதகமுங் கோதறவேதமையுணர்ந்தோர்க்குண்டெங்கெனிற்-சலமறு சேதனவடிவைச் சடமாய்ப்பார்க்கவிற்கொலைதன்மயக்கங்கள்ளா-மலமனமாதிகளெனதென்றிடல்கள்ளவைசெய்தெனென்றல்பொய்யாம் நிலையிலுடலுறவின்பமெனவைம்பாதகமுணர்ந்தோர்நித்தர்சுத்தர் * என்றும்அமிர்தசாரம் யோகத்திலுண்மையுணர்வன்றியூன்பொருட்டா-லேகத்தினின்றுமனைவியம்பிமோகம்-மனத்தவலமாற்றுதவல்வேடர்தம்மை- நினைத்தவருங்காணர்நெறி * என்றுங்கூறப்பட்டிருப்பதால் அசம்பாவனை சம்சயபாவனை விபரீதபாவனைகளற்றுத் தானேதானாய்ச்சுயம்பிரகாசமாய்ச்சொரூபமாய்நின்மலமாய்நித்தியதிருப்தியடைந்து அந்தர்முக நிஷ்டையானசமாதியுடையவர்களேசதாநிஷ்டர்களாய் விளங்குகின்றவர்கள் இதிற்சம்சயமில்லைசித்தம்

ஐந்தாவது - உபசாந்திப்பிரகரணமுற்றிற்று.

[௫௮]



## ஆறுவது.

# நிருவாணப்பிரகரணம்.



அவதாரிகை.

முற்பிரகரணங்கள் ஐந்தினாலுஞ் சர்வஞானோத்தரனாய் விளங்குமுபசமனம் பெற்றுச் சீவன்முத்திசாக்ஷாத்கார துரியானுபவ நிலைத்துள்ள சீஷனுக்குமேல் அபிபதலக்ஷியார்த்தமான அகண்டானந்த துரியாதீத சுவானுபூதிமாத்திரமாய் ரமித்திருக்கும் விதேகமுத்தி யனுபவஞ்சித்திக்கும்பொருட்டு நிருவாணப்பிரகரணங்கூறுகின்றார்.

கவி.

உள்ளதாஞ்சைவம்பாசுபதங்காளாமுகத்தினோடு ... ..... *
விள்ளுமாவிரதம்வாமம் வயிரவமிவையாறுந் ... ...*
தள்ளுமப்புறத்துலோகா யுதஞ்சமண்பௌத்தனோடு ... *
மன்னுமீமாம்சகன்றன்வயிணவன்மாயாவாதி ..... ... *
வாதமீராறிலுள்ள மதங்களின்வகுத்தநூலா ... ... *
லோதுறிற்பிராந்தியல்லாலுளப்பிராந்தியைத்தானீக்கா *
தேதினும்பிராந்திதானுந் தெளிவிக்குநூலேதென்னி... *
லாதியாம்வேதாந்தத்தின்விசாரத்தாலறிவர்தாமே... ...*

இதன்பொருள்.

வினா. சமய வுண்மையில் நிலைத்துள்ள சமயிகளுக்கு முத்தியின்றோ வென்னில்,

விடை. சைவம் பாசுபதம்காளாமுகம்மகாவிரதம்வாமம் வயிரவம் இவ்வாறும் அகச்சமயமென்றும்லோகாயுதம்மீமாம்சம் பௌத்தம் சமணம்பாஞ்சராத்திரம் மாயாவாதம் இவ்வாறும் புறச்சமயமென்றுஞ் சொல்லப்படும் அவற்றுள் உட்சமயத்தில் சைவமானதுபோதிமாகிய சிவ ஞானிவிக்கச்சிவனிவாநென்றும் ஆண்டவனுமடிமையுமா யிருக்கவேண்

டுமென்றுஞ்சொல்லும்-பாசுபதமானது - பரமாணுவுபாதானமாய் நின்று அதன்புணர்ச்சியேகாரணமாயுலகம் பண்ணப்பட்டதென்றும்இறை நிமித்தகாரணமாய் நிற்குமென்றும் உயிர்களெல்லா மலங்களாற் பிணிப்புண்டுகிடக்குமென்றுஞ் சொல்லுவதன்றி ஆகமத்தின்முறையே ஆசாரணம் பண்ணியருச்சித்துபிணிப்பாகியபாசமறுத்து அணுவாகிய சீவன்சிவனாகியபதியைக் கூடுமென்றுஞ்சொல்லும்காளாமுகம் மகாவிரதயாகிய விரண்டும் அத்தியந்தஞ்சடை முதலானவடையாளங் கொண்டுபத்தியோடுஞ்சிவனைவழிபட்டருச்சித்து நியமக்குலையாதிருந்தால் வினையுடல்விடும்போதுசிவலோகத்தையடையலாம் அதுவேமோட்சமென்றுஞ் சொல்லும்-வாமமானது-மதுமாமிசங்கொண்டு சத்தியான ஸ்திரீகளைப்பூசித்து அவர்கள்சேடமுட்கொண்டு அந்தப்போதை யானந்தத்திருப்பதே மோட்சமென்று சொல்லும்-வயிரவமானது - மயானத்திருந்துஎன்புதரித்துசாம்பற்பூசி யுபவாசமாயிருந்து மாவயிரவமென்னு மோமமூண்டாக்கி நரபலிகொடுத்து அந்நரமாமிசமும மதுவுங்கபாலத்தில்வைத்து ஓமத்திலாகுதிபண்ணி அம்மதுவு மாமிசமு மறுநாள்கொள்வதேபாரணமென்றும்இப்படிசெய்துமுடிந்ததே நிருவாணவீடென்றுஞ்சொல்லும்-மீமாமிசமானதுபசுபடுத்தியாகம்பண்ணி அந்தயாகபலத்தினால்தேவர்களாய்சுவர்க்கத்திருப்பதேமோட்சமென்றும் வேதாத்தியாயனம் பண்ணுஞ்சத்தமேபிரமமென்றுஞ் சொல்லும்-பௌத்தமானது இந்திரியங்களினறிவேஞானமென்றும்பூதாகாசமேயாத்மாவென்றுஞ் சொல்லும் - சமணமாவது இந்திரியநிக்கிரகியாய்க் காமத்திற்புகுதாமலிரவுணவுகளை மறுத்துஉடலையொறுத்துச் சிகைபறித்திருப்பதேபொன்னெயில்வட்டத் தருகருடன்சேர்வதென்றும் சொல்லும்- பாஞ்சராத்திரமானது-ஆதிமூலமானவிஷ்ணுவே தமதுமாயையினால் உலகுயிரெல்லா முண்டுபண்ணினானென்றும்அந்தமாலையே யவருக்குவடிவமென்றும்வசுதேவர் முதலான நால்வர்களின்சமாராதனத்தாற் சீவர்கள்பெத்தம்விட்டுப்பாமபதம்பெறுவார்களென்றும்சொல்லும் - மாயாவாதமானது நானென்னுமகங்காரியேபிரமம்அவருக்கு ஒருவிகாரமுமில்லை அவர்சந்நிதான விசேடத்தால்மாயை

சேடித்து நின்றஉலகுயிருண்டுசெய்ததென்றும்பரந்தமோட்சமில்லை-யெ ன்றுஞ்சொல்லும்- இந்தப்பன்னிரண்டினுள் பாஷாண்டம் விரோசனம் சாருவாகம் உபாசகம்க்ஷணிகவாதம் அந்தராளம் ஆகமம்திகம்பரம்பிரபா கரம் தார்க்கிகம்பாட்டம்சாங்கியம்யோகம்பதஞ்சலியம் விஸ்வரூபம்பிர சாபத்தியம்காருடத்தியம் கௌமாரகம்பௌராணிகம் கன்மசாஸ்திரம் என்றுசொல்லப்பட்ட அனேகமதங்களுண்டு அவர்களெல்லாம் தங்கள்த ங்கள் மதாபிமானமேமேற் கொண்டுமந்திரவாதம்ரசவாதமுதலியசாஸ் திரங்களைத்தொடுத்து நின்று பிராந்தர்களாயலைந்து போனார்களென்று பஞ்சதசப் பிரகரணத்திற் பிரமாணமிருக்கின்ற படியினால் சமயிகளுக் குமுத்தியில்லை.

வினா. சிவவாதிகளுடனே ஈஸ்வரவாதிகளையும் பிராந்தர்களென்றுசொ ல்லலாமோவென்னில்.

விடை. சொப்பனத்திற் பிட்சையெடுக்கிறவனிலும் அரசனாயிருக்கிறவ னதிகமானாலும் விழித்தபிறகுஇரண்டுசொப்பனமும்பொய்யா னதுபோலஇருவகைவாதிகளும்கற்பிதத்தில்தாரதம்மியமாயிரு ந்தாலும் ஞானம்வந்தவனைக்குறித்து இருவகைவாதிகளும்பிராந் தர்களென்றேசொல்லவேண்டும்.

வினா. இப்படிவேதாந்தவிசாரத்தினால் வஸ்து நிர்ணயம்பண்ணுவதா னால் அந்தவாதிகளுக்கெல்லாம் விரோதமல்லவோவென்னில்,

விடை, ஒன்றேபொருளென்றவேதாந்தத்திற்கும் அதைத்தானே குருடர் யானைகண்டதுபோற் கண்டிருக்கின்றமதவாதிகளுக்கும் சற்றும் விரோதமில்லை.

வினா. ஒன்றேபொருளென்னும் வேதாந்தத்திற்கும் மற்றுள்ள மதங்க ளெல்லாமாயாமயமென்பதற்குப்பிரமாணமுண்டோவென்னில்

விடை, முப்பத்திரண்டுஉபநிஷத்துமேபிரமாணமென்று பஞ்சதசப்பி ரகரணத்தில் நிருபித்திருக்கின்றதேபிரமாணசித்தம்.

வினா. விசாரஞானத்தினால் வஸ்துநிர்ணயம்பண்ணுவ தெப்படி யெ ன்னில்.

விடை. ஷட்லிங்கதாற்பரியங்கொண்டு வேதாந்தவிசாரம்பண்ணின சிரவணபலத்தினால்வஸ்து நிர்ணயம்பண்ணவேண்டும்.

வினா. அதெப்படியென்னில்.

விடை. உபக்கிரமம்உபசங்காரமென்றொன்று அப்பியாசம் அபூர்வதை பலம்அர்த்தவாதம்உற்பத்தியென்றறுவகைகளாம்.

வினா. உபக்கிரமமாவதேதென்னில்.

விடை. அகண்டபரிபூரணசச்சிதானந்தபிரமத்தினிடத்தில் ரச்சுவிற்சற்பந்தோன்றினதுபோலசகலபிரமாண்டபிண்டங்களாகிய சகத்துண்டாயிற்று, இந்தச்சிருஷ்டிக்குமுன் பிரமஞ்சத்தாமாத்திரமாயிருந்ததென்றுபிரதிவாதிக்கப்படுவதேஉபக்கிரமம்.

வினா. உபசங்காரமாவதேதென்னில்.

விடை. உற்பத்தியானசகலசெகத்தும் அபவாதக்கிரமமாகவொடுங்குகையால்பிரமாண்டபிண்டங்களென்னுமுபாதியிற் கூடஸ்தருக்கும் பிரமத்துக்குமுள்ள வுபாதிகளையொழித்து ஏகத்துவ அயிக்கத்தைக்கூறப்படுவதேயுபசங்காரம்இவ்விரண்டுமொரேலிங்கமாம்.

வினா. அப்பியாசமாவதேதென்னில்.

விடை. பிரத்தியேகான்மாவாகிய நீயே பிரமமென்றொன்பது பிரகாரமாகவுபதேசிப்பது அவ்வுபதேசம்சேதனனைக்கூட்டிச் சொல்வதினாலும் சேதனனுக்கே அத்தொய்தஆத்தும தத்துவம் போதிப்பதினாலும்அஃதேஅப்பியாசம்.

வினா. அபூர்வதையாவதேதென்னில்.

விடை. அஷ்டப்பிரமாணங்களினுள்உபநிஷத்பிரமாணத்தினாற் பிரத்தியேகாத்மலக்ஷணத்தையறியப்படுவதன்றி மற்றைப் பிரமாணங்களினாலறியப்படாதென்பது.

வினா. அஷ்டப்பிரமாணமாவதேதென்னில்.

விடை, பிரத்தியட்சம் அனுமானம் உவமானம் ஆகமம் அருத்தாபத்தி ஐதிகம் சம்பவம் என்றெட்டுவிதமுண்டு,

வினா. அவற்றுள் பிரத்தியட்சப்பிரமாணமேதென்னில்,

விடை, பிரத்தியட்சத்தில் சந்தேகப்பிரத்தியட்சம் விபரீதப்பிரத்தியட்சம் யதார்த்தப்பிரத்தியட்சமென்று மூன்றுவிதமாயிருக்கும் அவற்றில் கட்டையைக்கண்டு கட்டையோ கள்ளனோவென்று சங்கற்பித்தது சந்தேகப்பிரத்தியட்சம்-கள்ளனென்றே விகற்பித்தது விபரீதப்பிரத்தியட்சம் கட்டையென்றறிந்தது யதார்த்தப்பிரத்தியட்சமென்று சொல்லப்படும்

வினா, இவற்றிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

விடை, யதார்த்தப்பிரத்தியட்சத்திற்கொருபிரமாணமும் வேண்டுவதின்றுசந்தேகவிபரீதபுத்திநிவிர்த்திக்கேபிரமாணங்கள் வேண்டுவதாகையால் ஆசிரியர் பிரஞ்ஞானம்பிரமமென்று இருக்குவேத மகாவாக்கியத்தையுபதேசிக்கச் சீடனும் அறிவே பிரத்தியட்சத்திற் பிரகாசிக்குமாறால் தேகாதிசெகத்தெல்லாம் பிரத்தியட்சத்திற் காணப்படுகின்றதாகையால் நான்தேகமோ அறிவோ என்றதே சந்தேகப்பிரத்தியட்சம் நான்தேகமென்றுறுதிகொண்டதே விபரீதப்பிரத்தியட்சம் நான் பிரமமென்று நிலைத்ததே யதார்த்தப்பிரத்தியட்சம் இவ்யதார்த்தப் பிரத்தியட்சத்திற்கு வேறுபிரமாணங்கள் வேண்டுவதின்றுசந்தேக விபரீதபுத்தி நிவிர்த்திக்கே அனுமானப்பிரமாணமும்விசாரிக்கவேண்டும்.

வினா, அனுமானப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, அனுமானத்தில் பிரதிக்கினை ஏது திருஷ்டாந்தமென மூன்றுவிதமுண்டு அவற்றில் பர்வதங்களிலக்கினியுண்டென்பதுவே பிரதிக்கினை, தூமமுள்ளதுகாரணமென்பதே ஏது, மகானசத்திலக்கினியுண்டென்பதுவே திருஷ்டாந்தமாம்,

வினா, இவற்றுள் பிரதிக்கினையிற்சொரூபவபிப்பிராயமேதெனில்,

விடை, பூதங்களான அதஃத்துடவுகிசராசரமானவோர் தேகத்தை

றித்து இவ்வுடம்பின் கண்ணறிவாகிய பிரமமிருக்குமென்றுநிச்சயிப்பதேபிரதிக்கினை,

வினு, ஏதுவிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, தேகேந்திரியாதிகளிலறிவுநின்று பகுத்தறிகின்றது தேகேந்திரியாதிகள் சடமாகையால் அறியச்சத்தியில்லை தேகேந்திரியாதிகளே யறிவதானுல்சுழுத்திமூர்ச்சைசமாதியினிடத்துமறியவேண்டுமேஅங்ஙனமறியாமையினுல் இந்திரியங்களிற்பகுத்தறிவிருப்பதுகொண்டு இவ்வறிவுக்காதாரமானபிரமமொன்றிருக்குமென்பதே ஏது.

வினு, திருஷ்டாந்தத்திற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, பிரத்தியட்சத்திலெழும்பின புகையைக்கண்டு அப்பிரத்தியட்சமான அக்கினியிருக்குமென்றறிந்ததுபோல தேகேந்திரியாதிகளினின்றறியுமறிவைப்பிரத்தியட்சத்திற்கண்டு யாவராலுமறியப்படாததாய் அவாங்மனுதீதமானபிரமமொன்றிருக்கிறதென்றறிவதேமூக்கியப்பிரயோசனமென்றுசொல்லப்படும்-பூதபவுதிகசராசரங்களிலும்அறிவாகியபிரமமிருக்கிறதென் றனுமானத்திற்காணப்பட்டதன்றிப்பிரத்தியட்சத்திற் காணப்படவில்லை - அஃதென்ன லட்சணமுடையதா யிருக்குமோவென்றபுத்திவிருத்திபரிகரிக்கவேண்டி உவமானப்பிரமாணமும்விசாரிக்கவேண்டும்.

வினு, உவமானப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, மனாமிருகமென்றொன்றுண்டென்றுகேள்விப்பட்டவன் அதை அறியவேண்டியஆவலினுலறிந்தபேர்களைவினவ அவர்களுமேகதேசதிருஷ்டாந்தமாய் இந்தப்பசுப்போலிருக்குமென்பது உவமானப்பிரமாணம்,

வினு, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, பிரமத்தையறியவிருப்பினவன்பிரம சொரூபமெப்படியிருக்குமென்று பெரியோர்களைவணங்கிக்கேட்கஅவர்கள்அதற்கோருவு

மையினாலும் ஏகதேசதிருஷ்டாந்தத்தினாலுமறிவிக்கவேண்டியதினால் அந்தப்பிரமச்சச்சிதானந்தசொரூபலட்சணமாய் இந்தப்பூதாகாசம்போல வியாபகப் பட்டிருக்குமென்றுசொல்ல ஆகாசலட்சணமென்னவென்று வினவஆகாசம்நான்குபூதங்களுக்குமாதாரமாய்நானென்றோடும்பற்றுநிருக்கையாலும் நான்குபூதங்கட்கும் ஆகாசத்தைத் தவிர விருப்பிடமின்மையாலும் நான்குபூதமுமாகாசமேயாதாரமாயிருந்தது கொண்டுஅந்த ஒருஆகாசத்தையேகடாகாசம்மடாகாசம் சலாகாசம் மகாகாசமென்றுஉபாதிவசத்தாற்கண்டு கூறப்பட்ட போதும் அவ்வாகாசத்திற்கு இந்நான்குபூதங்களைக்குறித்துவந்தவுபாதிகள் சற்றுமின்றி இந்நான்கு பூதங்களையுங்கவளீகரித்ததிக்கிரமித்து அவயவமின்றி நிரவயவமாயிருக்குமென்னக்கேட்டு அந்தப்பிரமமும் இவ்விலக்கணமுடையதா யிருக்குமென்றுபரோட்சமாயறிந்ததே அபிப்பிராயம் இவ்விலக்கணமுடைய பிரமமானது இருக்குமிடந்தெரியவரவில்லையேயென்றபுத்திவிருத்தி பரிகரிக்கவேண்டி ஆகமப்பிரமாணமும்விசாரிக்கவேண்டும்,

வினா, ஆகமப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, சொர்க்கலோகத்தில் அமிர்தமிருக்கிறதென்றுங்காசியி லரிச்சந்திரன்மயானங்காத்த பரண்காலின்னமிருக்கிறதென்று மாகமஞ்சொல்லக்கேட்டுஅதில் நிச்சயபுத்திவந்ததே ஆகமப்பிரமாணம்

வினா, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, ஏகமேவாத்துவிதம்பிரமமென்ற சுருதிவாக்கியமும்மேனியிற்புறத்தினுள்ளின்மேலொடு கீழிற்றிக்கில் வானில் வையகத்திலெங்கும் யானிலாவிடமுமில்லையென்றஸ்மிருதிவாக்கியமும்சோதிதானாயிருந்தாற்பிரமமதாமென்ற வுபநிஷத்வாக்கியமும் பிரமாணமாகச்சொல்ல, சுரோத்திரவிடயமாய்க்கேள்வியுற்று தன்னிடத்தில் அந்தச்சச்சிதானந்தசொரூபலட்சணமிருக்கிறதா வென்று விசாரிக்குமளவில் சென்மாந்தாகன்மத்தாலிந்தச்சரீரம் இப்போதுவந்ததென்றும் இப்போது செய்கிறகன்மத்தின லினிவருகாலத்திலும் தேவமனுஷிதிரியக்காதி ஜென்மங்கள்

வருமென்றும் அனுபவமிருப்பதால்சத்தாச்சுது மேலும்-திரிகாலத்திலு முண்டானசரீராதிகளழிவதும்அவற்றால்வரும் சுகதுக்கமானுவமானஹானி விருத்திலாபாலாபங்களையும்அறிவாயிருந்தறிகின்றதால் சித்தாச்சுது-மேலும்-சத்துவேறுசித்துவேறென்றுபிரித்துப்பார்க்கவிரண்டில்லாமையினாலானந்தமாச்சுதுபின்னும்அறிவானதுபற்றற்றிருக்க,தேகேந்திரியாதிகரணங்கட்கு மவ்வறிவைத் தவிர விருப்பிட மின்மையாலும் அறிவே யவைகட்காதாரபூதயாயிருப்பதினாலும் இந்தத்தேகேந்திரியாதிகரணங்கட்குமவ்வறிவேயாதாரமாயிருந்தது கொண்டு அவ்வறிவுதானேகூடஸ்தனொன்றுஞ்சீவனென்றுமீசுரனென்றுமுபாதிவசத்தினாற் பின்னமாகக்கண்டம்போலும் பரிச்சின்னம்போலுங் காண்பித்தவிடத்திலும் அவ்வறிவாகியபிரமத்திற்குத்தேகேந்திரியாதிகளைக்குறித்துவருமுபாதிகளின்றித் தேகேந்திரியாதி காரணசிவனையுங்கவளீகரித்ததிக்கிரமித்தும் அவயவமின்றி நிரவயமாயிருப்பதினாலும் முன்பரோட்சமாயறியப்பட்ட சச்சிதானந்த சொரூபத்தைத்தானென்று அபரோட்சமாயறிந்ததே ஆகமப்பிரமாணநிர்ணயம் முற்கூறியமூன்றுபிரமாணங்களினாலும்வஸ்து நிச்சயங்கூடாது-இந்தப்படிஎப்போதுஞ் சச்சிதானந்த சுபாவமாயிருக்கமுன்பெத்தநிலையிலிந்தலட்சணமறியாமற்போனதென்னவென்றுவருகிறபூர்வவிருத்தியரிகரிக்கும்பொருட்டு அருத்தாபத்திப்பிரமாணமும்;விசாரிக்கவேண்டும்.

வினா. அருத்தாபத்திப்பிரமாணமேதென்னில்.

விடை, திருஷ்டவருத்தாபத்தியென்றுங் கேள்வி யருத்தாபத்தியென்றுமிரண்டுவிதம்இதில்நித்தியவுபவாசியென்று பேரிட்டிருக்கிற ஒருவனது தேகபீனத்தைக்கண்டு இவனேகாந்தத்திற் போசிப்பனென்றறிகிறதே திருஷ்டவருத்தாபத்தி,

வினா, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

விடை. முன்பெத்தநிலையினுஞ்சச்சிதானந்தமென்றறிந்துந்தன்னைத் தெரியவொட்டாமன்மறைத்ததேயருத்தாபத்தி - அதற்குச்சகல

பிராணிகளுமனுபவமாக நான்பூர்வஜென்மத்திற்செய்யாதின்றபுண்ணிய பலத்தினால் இந்தச்சென்மத்திலும்நல்லஜாதிகுலகோத்திரவருணதேகரூப ஐஸ்வரியமனையாதி சம்பத்துமுண்டாயிற்றென்றும் இப்போதுசெய்யும்புண்ணியகன்மத்தினால்இனிமேலுந் தேவமனுடராய்ப் பிறப்பேனென்றும்முன்சென்மத்திற் கொடுத்துவைக்காத பாவியாகையால்இப்போதுந்தரித்திரனாயிருக்கிறேன் இந்தச்சென்மத்திலும் ஒருவருக்குங்கொடாததரித்திரனாயிருப்பதினால் வருசென்மத்திலுந் தரித்திரனாய்ப்பிறப்பேனென்றும் இன்னவருடம்இன்னமாதம் இன்னதிதிநட்சத்திரயோககரணவாரத்திற்பிறந்தேனென்றும்இந்தமட்டுஞ்சவுக்கியத்தை யனுபவித்தேன் இனிபொல்லாதகஷ்டம்வரப்போகிறதென்றும் அந்தக்கஷ்டந்தாக்குமேலிந்தச்சரீரநில்லாதென்றும்இப்படி திரிகாலங்களிலுமுண்டான ஜீவிருத்திசுகதுக்கலாபாலாபமானவெங்களையு மறிந்திருக்கிறதினால்தான் சச்சிதானந்தலட்சணமாயிருந்துந்தெரியவில்லை என்றஞேயஞ்ஞானம், அதுஞேயஞ்ஞானமானால்தெரியவில்லையென்றவறிவுவரக்கணக்கில்லை ஈதறிவுதானென்றால்அறிஞேயனென்னுமஞ்ஞானம்வரக்கணக்கில்லை ஆகையால் இந்தஅருத்தாபத்தியேசுத்தமானதன்னைத்தெரியவொட்டாதுமறைத்ததலைமைபெற்றவஞ்ஞானம்நித்தியவுபவாசியென்பவனுடையசரீரமினையாந்துகண்டுராத்திரியத்திற்போசிப்பனென்றறிவதுபோல நான்சச்சிதானந்தலட்சணமென்பதுதோற்றுதிருந்தாலுந்தன்னனுபவத்தினாலாந்திவிசாரித்தறிந்தால்தானேசச்சிதானந்தசொரூபமாவன்இதுவேதிருஷ்டவருத்தாபத்தி-இப்படி சச்சிதானந்தசொரூபமென்பது அனுபவமாயறிந்திருந்தும்முன்போலவே நாமரூபாதிகள்தோற்றுவதன்றி அந்தலட்சணமிருந்தால்தோற்றாதாவென்றுவருகிறபுத்திவிருத்திபரிகரிக்கும் பொருட்டு கேள்வியருத்தாபத்திப்பிரமாணமும்விசாரிக்கவேண்டும்,

வினா. கேள்வியருத்தாபத்தியாவதென்னவெனில்,

விடை, ஓர்புருஷன் அடுத்தகிராமத்திலிருக்கும் ஒருவனைக்காணவேண்டி வந்து அவன்மனைவாயினின்று இந்தக்கிராமவாசியி [illegible]
ன் [illegible] வர்களை வி [illegible]

ஷஅபாவசத்தங்காதிற்கேட்டும் அவனிறந்துபோகவில்லைஅன்னி யதானங்களிற்போயிருப்பானென்றறிந்துகொண்டதேகேள்வி யருத்தாபத்தி,

வினு, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

விடை, நாமரூபாத்மகங்களினுமாத்மாவில்லை யென்றறிந்தவறிவுமாத்தி ரமிச்சமாயிருக்கக்கண்டதேஇல்லையென்றகேள்வி யருத்தாபத்தி யின்பிரயோசனமாம்-அறிவேவடிவாயிருப்பதாத்மாவானால் அறிபொரு ளைக்குறித்தேயறிவென்றபேரிருக்கிறதாகையால்அறிபொருளாகிய ஜீவே ஸ்வரசகத்தும்அதன்காரணமானமாயையும் அநாதியாயிருக்கவேண்டும்அ ப்போதுஅதுகளுக்கு நித்தியத்துவம் வருமேயென்னும் புத்திவிருத்தி பரிகரிக்கும்பொருட்டு அபாவப்பிரமாணமும் விசாரிக்கவேண்டும்,

வினு. அபாவப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, பிராகபாவம்பிரத்தொம்சாபாவம்அன்னியோன்னியாபாவம்அத் தியந்தாபாவம்என நான்குவிதம்

வினு. இவற்றுள்பிராகபாவமாவதேதென்னில்

விடை, குலாலன் சக்கரத்திருக்குமிருத்திகாபிண்டத்தைப்பார்த்து இதிற் கடமில்லையென்றதுபிராகபாவம்,

வினு, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, கடமில்லையென்றஅபாவத்திற்குஅநாதித்துவமநந்த கற்பங்களா யிருந்தும் நித்தியத்துவஞ்சித்திக்கவில்லை- எப்படியென்றால்கு லாலன்சக்கரத்தைச்சுற்றிமிருத்திகாபிண்டத்திற்கைவைத்தபோதுமுன்னி ல்லாதகடகம் உற்பத்தியாயிற்று ஆதலால்முன் னில்லையென்றவ பாவத்தி ற்கநாதித்துவமிருந்தும் அநித்தியத்துவஞ்சித்திச்சது அதுபோலமாயை யுமதன்காரியமானஜீவேசுரசகத்தும் அநாதித்துவமென்றசிறிதுசாஸ்திர ங்களிற்கூறப்பட்டிருந்தாலும்விசாரஞானமான விருத்திஞானத்தினாற்ற ப்பட்டுஅநித்தியமாய்விடுமென்பதேபிராகபாவப்பிரயோசனமாயி ற்று-இருந்தும் ... தோன்றியபவிக்கும் விருத்திஞானத்தினாற்றகிக்கப்பட்டமா

யையும்அதன்காரியமான ஜீவேசுரசகத்துவ்விருத்திஞான மொழிந்தவிட
த்துமுன்போலப்பிரத்தியட்சமாய்த்தோற்றுமேயென்றபுத்திவிருத்திபரி
கரிக்கும்பொருட்டுபிரத்தொம்சாபாவமும் விசாரிக்கவேண்டியது,

வினா, பிரத்தொம்சாபாவமாவதேதென்னில்,

விடை, ஓர்தரித்திரனானயாசகன்ஓர்கடமேஆசத்தியாய்க்கொண்டு பாவ
வசத்தினால் மனைகடோறுமிரந்துண்ணுங்காலத்தில்அம்மனைகளி
லுள்ளசிறுவர்கள்அஞ்ஞானசிரேஷ்டவுச்சாகத்தினால் கற்கொண்டெறிய
அவ்விரப்பன்கடவாஞ்சையினால் அக்கல்லெறிகளைத்தும் தன்சரீரத்திற்
றாங்கிமதித்துஞ்சகிக்கமாட்டாமல் அவனுக்கேவிரத்திதோன்றி அக்கடத்
தைஓர்கற்பாறையின்மோதஅக்கடமுடைந்து சில்லுகளாய்ச்சிதறிவிட்ட
துபிறகுகடவாஞ்சையினால்அவன் புரண்டுபுரண்டழுதாலும்உடைந்தகட
ம்வரமாட்டாதென்பதேபிரத்தொம்சாபாவம்,

வினா; இச்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை- முன்விசாரஞானத்தாற்றகிக்கப்பட்டமாயையும் அதன் காரியமா
னஜீவேசுரசகத்தும்மீண்டுகற்பகாலத்திலும் உண்டாகமாட்டா
தென்றறிவதேயபிப்பிராயம்கடமுடைந்தும் அதன்காரியமறைந்து கார
ணமாகாமல்கடமேவோடென்றகாரியவுபாதிகாண்பதுபோல விருத்திஞான
த்தாலழிந்த மாயையும்அதன்காரியமான ஜீவேசுரசகத்தும் காரணமாய
பிரமமாத்திரமாய்ப்போகாமல்மாயாகாரியமான ஜீவேசுரசகத்தென்று
அறிவிற்றோற்றக்கண்டிருப்பதால் அந்தமாயையும் வஸ்துத்துவயமாயிரு
க்கும்ஆகையால்பிரமத்தில்மாயையுண்டுமாயையிற் பிரமமிருக்குமென்ற
புத்திவிருத்திபரிகரிக்கும்பொருட்டுஅன்னியோன்னியாபாவமும்விசாரி
க்கவேண்டியது,

வினா, அன்னியோன்னியாபாவமாவதேதென்னில்.

விடை, படத்திற்கடமும்கடத்திற்படமுங்காலத்திரயத்திலுமில்லை யென்
றறிவதேஅன்னியோன்னியாபாவம்,

வினா, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, அத்துவிதம் அவிநாசம் உவமானரகிதம் அவாங்மனோகோசரம் பவுருதீதம் அத்தியாதிப்பிரியலட்சணம் ஆகிய குணங்களையுடையதே பிரமசொரூபம். அவிதம் திரிசயம் மனவாக்குகோசரம் அனிர்வசனம் ஆகிய குணங்களையுடையதே மாயாசொரூபம் அம்மாயாசொரூபத்திற் பிரமசொரூபமில்லை-பிரமசொரூபத்தில் மாயாசொரூபமில்லையென்றறிகிறதிடம்வந்ததேயபிப்பிராயம் - இதுநாமரூபமென்றும் மாயையென்றும் நினைவில்தோற்றுகிறது அந்தமாயையில்லாவிட்டால் நினைவில் தோற்றமாட்டாது ஆகையினால் மாயையுமிருக்குமென்று வருகிறபுத்தி விருத்தியபரிகரிக்கும்பொருட்டு அத்தியந்தாபாவமும் விசாரிக்கவேண்டியது.

வினு, அத்தியந்தாபாவமாவதேதென்னில்,

விடை, ஒருபுருஷன்தனதுசொப்பனத்தில் தான்சாகவும் தன்னைத்தகனஞ்செய்யவும் மறுநாள்காடாற்றி அஸ்தியெடுத்துக்கும்பத்திலடக்கிக்கங்கையில்விடவுங்கண்டுபிறகுவிழித்துசாக்கிரத்தில்மனத்தால் நினைக்கவாக்கால்சொல்லவந்தும்மெய்யாகாமற்பொய்யென்றறிவதே அத்தியந்தாபாவம்

வினு. இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

விடை, மாயையென்றும் சீவேசுரனென்றும் நாமரூபங்களாய்ச்சொன்னாலும் நினைத்தாலும் சுத்தமித்தையேயெப்படியென்றால் ஆகாசத்தில்தாமரைபூத்ததென்றுநினைவில்தோற்றினாலும்அது எப்படியில்லையோ அதுபோல மாயையென்றுநினைவில்வந்தாலுங் காலத்திரயத்திலுமில்லையென்றறிடம்வந்ததேயபிப்பிராயம் மாயையென்பது காலத்திரயத்திலுமில்லாதிருக்கச் சகலதேகிகளுக்கும்நாளுவாய் பிரசித்தமாய் உண்டுபோலத்தோற்றுகிறதற்குக்காரணமேதென்றுவருகிறபுத்திவிருத்திபரிகரிக்கும்பொருட்டு ஐதீகப்பிரமாணமும்விசாரிக்கவேண்டியது,

வினு, ஐதீகப்பிரமாணமாவதேதென்னில்,

விடை, ஒருவன்ஒருஆலமரத்திலேறிஇலைபும்விறகும்தனக்குப்போதுமா

னமட்டும்பறித்துக்கொண்டு இறங்குஞ்சமயத்தில் ; வேறொருவ
ன்வந்து ஆரடாயிந்தியக்காரா இந்தமரத்தில்மகாயக்ஷனென்னும் பசாசி
ருக்கின்றதே இதினிடத்தில்ஒருவருஞ்சேருகிறதில்லையே நீ இதிற்கால்வை
த்தேறலாமாவென்றசத்தங்கேட்டமாத்திரத்தில் மனத்திற்பயமும் சரீரத்
தில்நடுக்கமு முண்டாயொடித்தவிறகும் பறித்தவிலைகளையுமெறிந்து வி
ட்டுமரத்திலிருந்திறங்கக்கால்நடுமாறிக் கீழேவிழுந்து மூர்ச்சையானதே
ஐதிகப்பிரமாணம்;

வினா, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, மாயையும்மாயாகாரியங்களுங்காலத்திரயத்தினு மில்லாதசுத்தமி
த்தையானும்பிரத்தியட்சமாய்க்காணுதயக்ஷவிஷயம்அன்னியன்
சொற்கேட்டமாத்திரத்தில்இருக்கிறதென்று சத்தியபுத்திவந்ததுபோல
அந்தமாயாகாரியமானஇலெளகசகத்துக்கள்பிரசித்தமாயுண்டுபோல அச
த்பாவனையாகியபிராந்திமூலப்பிரமையால் தோற்றுமென்றறிகிறதேயப
பிப்பிராயம்-மாயையென்பதில்லையானால் மாயாகாரியமானநாமரூபசகத்
தென்றும்சத்த பரிசரூபரசகந்தகரணமென்றும் அனேகவிபரீதங்கள்
தோற்றுகிறதற்குக்காரணமேதென்றுவருகிறபுத்திவிருத்தி பரிகரிக்கும்
பொருட்டுசம்பவப்பிரமாணமும்விசாரிக்கவேண்டியது,

வினா, சம்பவப்பிரமாணமாவதேதென்னில்,

விடை. ஆயிரமென்னுங்கணக்கில்ஒன்றுஇரண்டு அஞ்சுபத்துநூறென்
னுங்கணக்குமிருக்கிறதென்றறிவதேசம்பவப்பிரமாணம்.

வினா, இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

விடை, சத்தமென்றறியும்போது அவ்வறிவேசத்தரூபமாயிருக்குமன்றி
ப்பரிசரூபரசகந்தகாரணதேகங்களுமில்லை - பரிசமென்றறியும்
போது அவ்வறிவேபரிசரூபமாயிருக்குமன்றிச் சத்தரூப ரசகந்தகாரண
தேகங்களுமில்லை - ரூபமென்றறியும்போது அவ்வறிவே ரூபமாயிருக்கு
மன்றிச் சத்தபரிசரசகந்ததேக காரணங்களுமில்லை - ரசமென்றறியும்போ
து அவ்வறிவேரசரூபமாயிருக்குமன்றிச் சத்தபரிசரூபகந்தகாரணதே

ங்களுமில்லை - கந்தமென்றறியும்போது அவ்வறிவே கந்தரூபமா யிருக்குமென்கிச்சத்தபரிசரூபரசமரணமேதகங்களுமில்லை - ஆகையால் இந்திரிய சபளிதமாய்சத்தபரிசரூபரசகந்தங்களாய்த்தோற்றினவெல்லாம் அவ்வறிவாகியபிரமமேயதுவதுவாகத்தோற்றியது ஆனபடியினால் அறிவாகியபிரமத்தில் அனேகம்போலஅறிவாகியதனக்கேதோற்றலாம் அன்றியும்தான்சர்வசத்திமானாகலின் அனேகமுமிருக்கலாம் அப்படி யிருக்கையால் சர்வாதாரபூதமானநிருபாதிகப்பிரமமேயிருக்கிறதென்றறிகிறதேயபிப்பிராயம் இதுவேயபூர்வதை.

வினா, பலமாவதேதென்னில்.

விடை, இந்தச்சகலவஸ்துக்களில் ஒருவஸ்துவையறிந்தமாத்திரத்தில் சகலமுமிப்படியேயிருக்குமென்றறியதுபோல ஆத்மஞானமறிந்தமாத்திரத்தில் சகலபிரமாண்டபிண்டங்களிலுந்தானாய் விளங்கும் பிரமமேநாமென்றும் நாமே ஆத்மசொரூபமாய் விளங்குவமென்றும் இந்தத்தேகேந்திரியாதி சகல சகத்தும் பிராரத்தமுள்ளமட்டும் மித்தையாய்த்தோற்றப்படுகின்றதுபிராரத்தநாசத்தில் சர்வாத்மகமாய்த் தோற்றாமல் அத்தொய் ஆத்மசொரூபமாத்திரமாய்ப் பிரகாசிக்குமென்றும்பிரதிவாதிக்கப்படுகிறதேபலம்.

வினா. அர்த்தவாதமாவதேதென்னில்,

விடை. எந்தவஸ்துவைக் கேட்டமாத்திரத்தில் கேட்கப்படாதவஸ்துவேட்கப்படுகின்றது எந்தவஸ்துவை மனனம்பண்ணின மாத்திரத்தில் மனனம்பண்ணப்படாதவஸ்து மனனம்பண்ணப்படுகின்றது எந்தவஸ்துவையறிந்தமாத்திரத்தில் அறியப்படாதவஸ்து அறியப்படுகின்றது அதுவேபஞ்சகிர்த்தியங்கட்காதாரபூதமானகர்த்ருத்வமாய்விளங்குவதென்றும் பிரதிபாதிக்கிறதே அர்த்தவாதம்,

வினா, உற்பத்தியாவதேதென்னில்.

விடை. கடத்திற்குமண்ணும் தந்துவுக்குலண்டும் ஆபரணங்களுக்கிரும்புங் காரணமாகிறதுபோலத்தோற்றப்பட்ட நாமரூபசெகத்துக்குப்பி

அ.ஞ

# நிருவாணப்பிரகரணம்.

ரமமேகாரணமென்றுசெகத்துக்கும்பிரமத்துக்கும் அபின்னத்துவம்பிர
திபாதிக்கின்றதே உற்பத்தி இந்த அஷ்டப்பிரமாண ஷட்லிங்கதாத்பரி
யங்களைச் சற்குருசாஸ்திர மூலமாய்நிலையிற் கேள்விப்படுகிறதே சிரவணம்.

வினா. மனனமாவதேதென்னில்.

விடை. வேதாந்தசாஸ்திரங்களிலுற்சிரவணம்பண்ணின அர்த்த விதமான
பிரத்தியேகாத்மசொரூபத்துக்கு அநுகூலமானபுத்திவிருத்தியால
ளப்பிட்டு நிச்சயிப்பதுமனனம்.

வினா. நிதித்தியாசனமாவதேதென்னில்,

விடை. விசாதிகமானதேகேந்திரியாதிகளைச்சுசாதிகமான அகண்டாகார
விருத்தியோடு கூட்டிமலையினுச்சியில்விட்ட தயிலதாரைபோல
இடைவிடாமல்அகண்டாகாரவிருத்தியிலுற் சதாதியானித்து நிற்பதே நி
தித்தியாசனம், இப்படிஷட்லிங்கதாத்பரியத்துடன் கேள்விப்பட்டசிர
வணத்தில் ஒருவனுக்குளதுவரையில் அஞ்ஞானபுத்தி நீங்கவில்லையோ அ
துவரையிலும்சிரவணம்பண்ணவேண்டும் - இப்படிசிரவணம் பண்ணிநி
ச்சயித்தபொருளில் எதுவரையில்சமுசயபுத்தி நீங்கவில்லையோ அது
வரையிலும்புத்திதர்க்கவனுமானவுதவிகளால் மனனம்பண்ணவேண்டும், இ
ப்படி மனனம் பண்ணித்திடங்கொண்டவறிவில் எதுவரையில் யானென
தென்னும் விபரீதபுத்தி நீங்கவில்லையோ அதுவரையிலும் மந்திரயோக
முதலியவைகளையோ சாப்பியாசவுதவிகளால் நிதித்தியாசனம் பண்ண
வேண்டும்.

வினா, அதேதென்னில்,

விடை. அபரோட்சசாட்சாத்கார சிரவணத்தில் குதர்க்கங்களுடன் கூடிய
திரிசயமானது எவ்வளவுகாலநாசப்படவில்லையோ அவ்வளவுகா
லமுமஞ்ஞானம்போகாது ஆதலால்மோட்சதாகங்கொண்டவன்
தியானசமாதிகளையவசியம்பண்ணவேண்டியது.

வினா. அந்தத்தியானசமாதிகளெத்தனைவிதமென்னில்.

விடை. சவ்விகற்பசமாதியென்றும் நிருவிகற்பசமாதியென்றுமிரண்டுவிதமாயிருக்கும்.

வினா. சவ்விகற்பசமாதியாவதேதென்னில்.

விடை. ஞாதுருஞானஞேயம் என்னுந்திரிபுடிகளுண்டு அவற்றுள்தேகமேதானென்பது அசுத்தஞாதுரு அறிவேதானென்பது சுத்தஞாதுரு இந்தஞாதுருவேஞானமென்னுமனத்தோடுகூடி ஞானேந்திரியங்களால் விருப்புவெறுப் பென்றறிவது அசுத்தஞானம்-இந்திரியவழிகளினறிவாகிய அசுத்தஞானத்தைப் பொய்யறிவென்றறிந்ததேமெய்ஞ்ஞானதுரியமாகியசுத்தஞானம் - பூதங்களானதுதடித்து பவுதிகங்களாய் சத்தாதிவிடயங்களாய்த்தோற்றுவது அசுத்தஞேயம்இந்தச்சத்தாதிவிடயங்களனைத்தையுஞ்சொருபமாத்திரமாய்க்காண்பதேசுத்தஞேயம் ஆதலால் இவ்வசுத்தத்திரிபுடிகளை லயம்பண்ணிச் சுத்தத்திரிபுடிகளுக்குலயம்வாராதபடிஞேயமாயிருக்கிறகேவலப்பரப்பிரமவஸ்துவினிடத்தில் மனம்நிலைத்துத்தான்பிரமாகாரமாயிருப்பதேசவ்விகற்பசமாதி.

வினா, அதெப்படியென்னில்,

விடை- மண்ணாலாகியபாண்டம்மண்ணாயிருந்தும் பார்க்கிறவர்கண்களுக்குப்பாண்டமென்றெப்படி காணப்படுகின்றதோ அதுபோல ஞாதுருஞானஞேயங்களானசுத்தத்திரிபுடியானமனமும் சத்தாகிய சின்மாத்திரமானபிரமத்தினிடத்தில் சின்மாத்திரமாகவே விளங்குகின்றதாதலால் சவ்விகற்பசமாதியென்றுபெரியோர்கள்சொல்லுவார்கள்,

வினா, நிருவிகற்பசமாதியாவதேதென்னில்,

விடை, ஞாதுருஞானஞேயங்களானசுத்தத்திரிபுடியென்கிறமனோவாசனையுநீங்கிஞேயமாத்திரமான பரப்பிரமசொரூபந்தானானதே நிருவிகற்பசமாதி,

வினா, அதெப்படியென்னில்,

விடை, அப்பிற்கரைத்த வுப்பானது உப்பென்றுவேறாகாமல் அப்புயா

த்திரமாயிருந்ததுபோல - பிரமாகாரமானமனம் பிரமமாத்திரமாய்நிலைத்துத்திரிபுடிமுதலானசங்கற்பவிகற்பங்களின்றிச்சத்தாமாத்திரமானபிரமசொருபமாய்விளங்குகின்றதால்நிருவிகற்பசமாதியென்றுபெரியோர்கள்சொல்லுவார்கள் - இவ்விருவகைச்சமாதிகளில் மனோபேதமிருப்பதினாலும் சமாதிசுழுத்தியிரண்டினுள் மனோநாசஞ்சமமாய்க்காணுமையாலும் சுழுத்தியில் அஞ்ஞானங்காணப் படுகையினாலும் சமாதியில் அஞ்ஞானங்காணப்படாமையினாலும் அஞ்ஞானமும் அஞ்ஞான காரியமானசந்தேகவிபரீதமுமற்றுப்பிரமஞானத்திற்கு ஒருவிக்கினமுமின்றிச்சதாசொருபானந்தமுண்டாகும் பொருட்டுமோட்சதாகியானவன் அகம்புறமென்னும் பேதத்தால் அறுவகைப்பட்டிருக்கின்ற ஷிட்விதசமாதிகளிலும் அவசியும்அப்பியாசம்பண்ணவேண்டும்,

வினா, ஷிட்விதசமாதிகளாவதேதென்னில்.

விடை, அந்தர்திரிசயானுவித்தம் அந்தர்சத்தானுவித்தம் அந்தர்நிருவிகற்பம்பாகிய திரிசயானுவித்தம் பாகியசத்தானுவித்தம் பாகிய நிருவிகற்பம் என அறுவகைகளாம்.

வினா. அந்தர்திரிசயானுவித்தமாவதேதென்னில்.

விடை, அறிவுதானேதிரிசயங்களாகிய காமக்குரோதாதி விருத்தியிற் கூடி அவ்விருத்திகட்குச் சாட்சியாகத்தானேயிருக்கிற சொருபானுசந்தானம் பண்ணுகிறதே அகத்திரிசயானுவித்தம் மேலும் நானெனக்கு ஈதென்கிற காமக்குரோதாதிவிருத்திகளை எந்த அறிவினாலறியப்படுகிறதோ அந்தத்திருக்குருபமானவறிவுக்கு அகங்காரமுதலிய காமாதிகளே திரிசயங்கள் இந்தக்காமாதிவிருத்திகளையும் அவிகாரியாகப் பார்க்கிறசாட்சியாகத்தன்னைப்பார்க்கிறவன் நிஷ்கிரியனாகவேயிருப்பன் இந்தக்காமாதிவிருத்திகட்கெல்லாம் நான்சாட்சி என்றாலித்தவிருத்திகள்காணப்படுகிறதென்றுதன்னைச்சாட்சியாயறிந்தவன்சாட்சியாகவேயிருப்பன் ஆதலாற்றிரிசயமாயிருக்கிறகாமாதிசகத்தையும் ஆத்மாவாயிருக்கிறதன்னிடத்திலேலயம்பண்ணவேண்டும்.

வினா: லயம்பண்ணுமனுபவமெப்படியென்னில்.

விடை, நான்தேகமும்பிராணாதிவாயுக்களும் அகங்காரமும்மனமும் புத்தியும்சித்தமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களுமல்ல இவைகளுக்கெல்லாஞ்சாட்சியாகியும்நித்தியமாகியுமிருக்கிறபிரத்தியகாத்மசொரூபமேநான், நான் ஸ்தூலமுஞ்சூட்சுமமும்வளர்ந்தவனுங்குறைந்தவனும் பாலனும் எவ்வர்ணனும் விருத்தனும் ஊமையுந்தொண்டியும் மூக்கறையனும்வந்தவனும் போனவனும் கொன்றவனும் கொல்லப்பட்டவனும் கர்த்தாவும் போக்தாவும் சொல்லுகிறவனுஞ் சொல்லப்படுகிறவனும் சுகியும் துக்கியும் யோகியும் நியோகியும் ராகியும் விராகியும் காமியும் குரோதியும் லோபியும் பந்தனும் முத்தனுமல்ல இவைகளுக்கெல்லாஞ் சாட்சியாகியு நித்தியமாகியுமிருக்கிறபிரத்தியகாத்மசொரூபமே நான்-நான் உட்பிரக்ஞனுமல்ல வெளிப்பிரக்ஞனுமல்ல அறியப்படுகிறவனுமல்ல அறியப்படாதவனுமல்ல இந்தத் தேகேந்திரியாதிகளுடைய கூட்டரவுமெனக்கில்லை புண்ணியபாவங்களுமில்லை பசிதாகமுதலான ஷடூர்மிகளுக்குமப்பாற்பட்ட சதாவிமுத்தமான கேவலசித்ரூபமே நான் என்றுதன்சொரூபத்தைத் தானே கண்டுகொண்டுகாணப்பட்ட திரிபுடிகளெல்லாம் தனக்குள் லயம்பண்ணிக் கொண்டிருக்கவேண்டும் பிராந்தியினாற்காணுகிறவிபரீதபாவனைகளைவிவேகிநீங்கி நிற்பன்.

வினா, அதெப்படியென்னில்,

விடை, செகத்விபரீதபாவநீங்கிச்சுயம்பிரகாசமான ஆத்மசொரூபமானதே முத்தியென்றுசுருதிஸ்மிருதிகள் சொல்லுகின்றபடியால் சதாமனதை யொடுக்குகிறவனுக்கே இந்தச் சமாதிசித்திக்கும் இல்லாவிட்டாற்சித்தியாகாது ஆகையால்சதாமனதையொடுக்கவேண்டும் இது வன்றி ஒருவேதஷித்தினாலும் பாஷையினாலும் இந்த அகண்ட சச்சிதானந்தஸ்வரூபஞ்சித்திக்கமாட்டாது அதுசித்திக்கும்பொருட்டு அந்நிட்டாதிப்பிரியமான தன்னிடத்தில் அகங்காராதிகளையுமதன்விகாரங்களையும்லயம்பண்ணவேண்டும் எவனொருவன் ஆத்துமதத்துவத்தை யபேட்சித்து பிரிந்திரு

கிரியை நாசம்பண்ணுகிறதே அவனே முத்தன் அதுவல்லாமல் கோடிச ந்கருமங்கள் பண்ணினாலும் முத்தனாக மாட்டானென்று எசுர்வேதத்திலும் சுவேதஸ்வதராவுபநிஷத்திலுஞ் சொல்லுகின்றது அன்றியுஞ்சுயம்பிரகாச மானவாத்மாவையறிந்தவன் சகலஅஞ்ஞானபாவங்களையுமறுத்து ஜெனன மரணசம்சாரமானகிலேசங்களைவிட்டொழிவானென்று சகல வேதாந்தசா ஸ்திரங்களுஞ்சொல்லுகிறபடியால் சகல கிலேசங்களையும் விட்டொழிகி றதே ஜென்மமொழிகிறது அஃதேதெனின் பிறவாதமுத்தி.

வினா, கிலேசத்தையொழிக்கும்விதமெப்படியென்னில்,

விடை, ஆத்மநிஷ்டையினாலொழிக்கவேண்டியதாகையால்மோட்சகாமியா னவன் சதாகாலமும் நிஷ்டைபண்ணவேண்டும் ஜென்மவாசனையை த்தவிரப்புருஷனுக்குவேறு விரோதிகளில்லை ஆதலாற் சகலவாச னைகளுஞ் சமாதிநிஷ்டையாகிய ஞானாக்கினியினால் தகிக்கப்பட் டால்மீண்டுஞ்சென்மத்திற்கேதுவாகமாட்டாது.

வினா. அதெப்படியென்னில்,

விடை, அக்கினியினால் வறுபட்டவித்துமுளைக்கிற தற்கேதுவாகாதது போலஞானாக்கினியினால் தகிக்கப்பட்டவாசனாரூபமான கிலேச ங்கள் மறுசென்மத்திற் கேதுவாகமாட்டாது ஆதலால் மோட்சவானவர் கள் அசேஷவாசனாக்ஷயமும் விபரீதபாவநிவிர்த்தியும் உண்டாகும்பொ ருட்டு பிரயத்தினம் பண்ணியானாலும் சதாஞானசமாதியிற் பழகவேண் டியது இப்படிப்பட்டஞானநிஷ்டையுடையவனுக்குக் கன்மம்வேண்டுவ தில்லைகன்மத்துக்குஞ்ஞானநிஷ்டைக்குமொன்றுங் கூட்டரவுசித்தியாது

வினா, அதெப்படியென்னில்,

விடை, தேகாத்மபுத்தியோடு கூடின கர்த்திருத்வபாவனையைக் கெடுப்ப துஞானம் ஆதலாலொன்றுக்கொன்று விரோதமானஞானகன்ம ங்களுக்கெப்படி ஐக்கியங்கூடும் தேஜசதிமிரங்களுக்கெப்படிகூட்டர வில்லையோ மேற்குமுகம் பார்க்கிறவனுக்கு கிழக்குமுகம் பார்க்கிறக ண்ணிமைத்து விழிக்கிறதற் கெப்படி கூட்டரவில்லையோ அப்படியே

தமாகநாமரூபாதி சௌத்து விளங்குகிறது எப்படியென்றால் குளிர்ச்சிவெண்மை நெகிழ்ச்சி நுரையிவையென்கிறபேருமொன்றாய்க்கூடின சலத்தை அலையென்பதுபோல சச்சிதானந்த நாமரூபங்களொன்றாய்க்கூடின சொரூபத்தைப் பிரபஞ்சமென்று சொல்லப்படுகிறதென்று ஆரோபிதமான நாமரூபமிரண்டையுந் தள்ளி அதிஷ்டானமான சச்சிதானந்த சொரூபமாத்திரமாய்க் காண்பதே பாகியதிரிசயானுவித்தம்மேலும் சச்சிதானந்தபிரமத்தைத் தவிர நாமரூபங்களில்லையென்று நாமரூபங்களைவேறுபடுத்தி அதிஷ்டான சொரூபத்தி லாரோபிதங்களை லயம்பண்ணி அத்தொய்த வஸ்துவே நானென்று சதாபஜனை பண்ணவேண்டும்.

வினா இதற்கனுபவமெப்படியென்னில்.

விடை, இந்தப்பஞ்சபூதங்களும்பஞ்சபூதகாரியங்களும் நானல்ல இவைக்கெல்லாமதிஷ்டானமாகியும்விசுத்தமாகியும் சத்தாகியுமிருக்கிற பிரமமெதுவோ அதுவேநான் காணப்பட்ட பதார்த்தங்களும் குணங்களும் கிரியைகளுஞ்சாதியும் சத்தாதிபஞ்சவிடயங்களும் இந்திரியங்களும்பிராணனும்மனமும்புத்தியும் அகங்காராதிகளும் நானல்லஇவைக்கெல்லாமதிஷ்டானமாகியும் ஏகமாகியும் விசுத்தமாகியும் சத்தாகியும் பரமார்த்தமாகியுமிருக்கிற பிரமமேநான் திரிசயமான நாமரூபங்களெல்லாம் பொய் இதற்கதிஷ்டானப்பிரமமேசதாசத்திய மென்றுபாவித்து நடக்கும்போதும் இருக்கும்போதும் சதாத்தியானித்திருக்கவேண்டும் இதுவே பாகியதிரிசயானுவித்தசவிகற்பசமாதி.

வினா, பாகியசத்தானுவித்தமாவதேதென்னில்,

விடை. அதிஷ்டானமானசச்சிதானந்தத்தில் கற்பிதமான நாமரூபங்களை லயம்பண்ணி நிருமலமாகியும் அத்தொய்தமாகியும் பரமானந்தமாகியுமிருக்கிறபிரமமே நானென்கிறபாவனையைப் பொருந்தியிருப்பது பாகியசத்தானுவித்தம்.

வினா. இதற்கனுபவமெப்படியென்னில்,

விடை, அகண்டாகாரவிருத்தி தமோகுணத்துடன் கூடி அகண்டவஸ்துவிற்கூடாமல் நித்திரைவருகிறதே லயம்.

வினா. இதற்குநிவிர்த்தியெப்படியென்னில்,

விடை. பூகபுத்தியினால் லயத்தைப்போக்கிவிருத்தியை நிருமலம்பண்ணிப்பிரத்தியேகாத்மஅபிமுகமாய் நாட்டவேண்டியது,

வினா. விட்சேபமாவதேதென்னில்,

விடை, அப்படிவஸ்துநிலையில் நாட்டுகிறபோது அகண்டாகாரவிருத்தி ராசதகுணதோஷத்தினால் அந்தநாட்டத்தில் நிலைக்காமல் விடயநாட்டத்திலபிமுகப்படுவதேவிட்சேபம்.

வினா, இதற்குநிவிர்த்தியெப்படியென்னில்.

விடை, அகண்டாகாரவிருத்தியினால் தானே விடயங்களிலுள்ள தோஷங்களையாரோபித்து அதைப்பிரத்தியேகாத்மவபிமுகப்படுத்திநிற்கவேண்டும்,

வினா. காஷாயமாவதேதென்னில்,

விடை, அகண்டாகாரவிருத்தியானது ராசத தாமதகுணங்களால் சூழப்பட்டு லட்சியமானபரதத்துவத்திலு மொட்டாமல் பிரபஞ்சவிடயத்தையுநாடாமல் ஸ்தம்பம் போற்சுத்தஜடமாயிருக்கப்படுகிறதே காஷாயம்,

வினா. இதற்குநிவிர்த்தியெப்படியென்னில்,

விடை, அகண்டவஸ்துவின் சுகத்தையும் அதன் மகிமையையும் சொல்வதாகவும் திரிசயங்களெல்லாந் துச்சமென்று போதிப்பதாகவு மிருக்கிறவேதாந்த சாஸ்திரார்த்தங்களை யடிக்கடிவாக்கினாற் சொல்லவேண்டியது.

வினா, ரசாஸ்வாதமாவதேதென்னில்,

விடை, அகண்டாகார விருத்தியானது தான்வைத்த நாட்டத்திலிராமல் பூர்வவாசனாவேகத்தினால் சவிகற்பமான விஷயரசங்களைப் பொசிக்கப்போகிறதே ரசாஸ்வாதம்,

வினா, இதற்குநிவிர்த்தியெப்படியென்னில்.

விடை, வயிராக்கியபுத்தியினால் விஷயங்களிலபிமுகப்பட்டவிருத்தியைத்திருப்பிப்பிரத்தியேகாத்மவபிமுகமாய் நிறுத்தவேண்டும்-இந்தவிரோதங்களன்றிப்பின்னும் பலவிரோதங்கள் வந்தாலும் தியானசமாதியினால் அந்தவிக்கினங்களைப்போக்கி நிருவிகற்பசமாதியையே அப்பி

யாசிக்கவேண்டும், விடயங்களில் இந்திரியங்கள்செல்லாதபடிமனோநிக்கிரகம் பண்ணுகிறவனே தீரன் அவனே தீவிரதரமோட்சதாகியும் சகலவிருப்புவெறுப்பற்றவனுமாயிருப்பன் - அவனைக்கண்டமாத்திரத்திற் றாபத்திரயாதிசோகமோகங்களெல்லாம் பறந்தோடிப்போம் - அப்பால் சகலவிக்கினங்களையும் போக்கி ரட்சிக்கிறவராயிருக்கின்ற பரமேஸ்வரன் அவனிடத்தில் எப்போதும் உன்மனியாய் நின்று அவனாலருச்சிக்கப்பட்டு விளங்குவர் ஆதலால் மோட்சதாகியானவன் சகலவிக்கினங்களையு மொழித்து ஈஸ்வரனைப்பரமாகவைத்துக்கொண்டு ஈஸ்வரசகாயத்தினால் நிருவிகற்பசமாதியைச்செய்யவேண்டும், இப்படிப்பட்ட ராஜயோகியானவன் உள்ளும் புறம்புஞ்சொரூபத்தைத்தவிர அன்னியமில்லாதபரப்பிரமசொரூபந்தானேயாய் சகலதொழிலுமற்றுச் சும்மாவிருப்பன் இதுவே மோட்சசாதனநிலை இதைஉன்மனியாவஸ்தையென்றுசொல்லப்படும்,

வினா, உன்மனியாவஸ்தையாவதேதென்னில்,

விடை. நிருவிகற்பமாயிருக்கிற ஆத்மாவினிடத்தில் ஆத்மாகாரமாய்ஏகரூபமாயிருக்கிற அகண்டாகாரவிருத்திஞானமே யுன்மனியாவஸ்தையென்று பெரியோர்கள்சொல்லுவார்கள். இந்தப் பிரகாரம் அத்வைத பரப்பிரமப்பிரகாசத்தினால் அஞ்ஞானாந்தகார நிவிர்த்தியாகி ஞானேபரப்பிரமசாட்சாத்காரசொரூபமாய் விளங்கும்போது தேகேந்திரியாதிகளில் நானெனதென்றெழுகின்ற இருதயக்கிரந்தியும் சொரூபத்தைத் தெரியவொட்டாமல் மறைத்திருந்த சம்சயங்களும் சகல கன்மங்களும் அஞ்ஞானதுக்கமாதலாலதையடியோடு நாசம்பண்ணினவனே பிரமவித்து அவனே சிரேஷ்டன் அவனே சகலபந்தங்களுமொழிந்தவன் இந்த நிருவிகற்பசமாதியினால் த்வைததோற்றங்கள் லேசமுமில்லாமல் விட்டுக் கேவலசொரூபானந்தமாத்திரமாய் நினைப்புமறப்பாகியசுத்ததிரிபுடியுந்தோற்றாதிருப்பதே அபரோட்சசாட்சாத்காரநிலை இந்தச்சுவானுபூதியாகிய நடுநிலையில் விடயமுமில்லை புசிப்பவனுமில்லை யாதலால்இதைத் தானேபதிஞானமென்றும் பரஞானமென்றுஞ்சொரூபஞானமென்றுஞ் சொல்லுவார்கள்,

வினா, இன்னம் பலவகையாகச்சொல்லுகின்ற முத்தி நிச்சயங்களேதென்னில்.

விடை. அசைவறத்தெளிந்தவிடமே முத்தியென்றும் மும்மல நீங்கின விடமே முத்தியென்றும் சாக்கிராதீதமே முத்தியென்றும் நினை

